# அருள்

மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீன மலர்




திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசார்ய ஸ்வாமிகள்

5-2






உ

தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருவது

அருள் 5 ] சாதாரண ஐப்பசி (15 - 10 - 70) [கருணை 1

## அன்பார்ந்த வாசகர்களுக்கு

தமிழகத்தின் சைவமடாலயங்களுக்குள்ளேயே, ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது மதுரைத் திருஞான சம்பந்த ஸ்வாமிகள் ஆதினம்.

இன்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர், மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோளுக்கு இணங்கித் திருஞான சம்பந்தப் பெருமான் மதுரையம்பதிக்கு விஜயம் செய்தபோது, இந்த மடம் நிறுவப் பெற்றதாகும். இப்போது அங்கு அருளாட்சி புரிந்து வருகிற ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாசார்ய ஸ்வாமிகள், இந்த ஆதீனத்தின் 291'வது குருமஹாஸந்நிதானம் ஆவர்.

இவ்வளவு தொன்மையும் மேன்மையும் வாய்ந்த இந்த ஆதீனத்தின் சிறப்புக்களை நம் தமிழ் மக்கள் தெரிந்து மகிழவேண்டும் என்பதற்காக, ''அருள்'' பத்திரிகையின் இந்த இதழை மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதின மலராக வெளியிடுகிறோம். அன்பர்கள் படித்து இன்புறுமாறு வேண்டுகிறோம்.

இது ஒரு சிறப்பு இதழாக வெளியிடப்படுவதால், வழக்கமாக வெளியிடப்படுகிற பல பெரியோர்களின் கட்டுரைகள் இதில் இடம் பெற இயலவில்லையென்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

— ஆசிரியர்


| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி: நிர்வாகி, ''அருள்''
4, தணிகாசலம் செட்டி தெரு, தியாகராயநகர், சென்னை-17.

திருஞான சம்பந்தப்பெருமான்

அருளிச்செய்த

# திருநீற்றுப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

1) மந்திரமாவது நீறு;
வானவர் மேலது நீறு;
சுந்தரமாவது நீறு;
துதிக்கப்படுவது நீறு;
தந்திரமாவது நீறு;
சமயத்தில் உள்ளது நீறு;
செந்துவர் வாயுமை பங்கன்
திருஆலவாயான் திருநீறே!

2) வேதத்தில் உள்ளது நீறு;
வெந்துயர் தீர்ப்பது நீறு;
போதந்தருவது நீறு;
புன்மைதவிர்ப்பது நீறு;
ஓதத்தகுவது நீறு;
உண்மையில் உள்ளது நீறு;
சீதப்புனல்வயல் சூழ்ந்த
திருஆலவாயான் திருநீறே!

3) முத்திதருவது நீறு;
முனிவர் அணிவது நீறு;
சத்தியமாவது நீறு;
தக்கோர் புகழ்வது நீறு;

பத்திதருவது நீறு;
பரவ இனியது நீறு;
சித்தி தருவது நீறு;
திருஆலவாயான் திருநீறே!

4) காண இனியது நீறு;
கவினைத் தருவது நீறு;
பேணி அணிபவர்க்கெல்லாம்
பெருமை கொடுப்பது நீறு;
மாணம் தகைவது நீறு;
மதியைத் தருவது நீறு;
சேணம் தருவது நீறு;
திருஆலவாயான் திருநீறே!

5) பூச இனியது நீறு;
புண்ணியமாவது நீறு;
பேச இனியது நீறு;
பெருந்தவத் தோர்களுக்கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு;
அந்தமதாவது நீறு;
தேசம் புகழ்வது நீறு;
திருஆலவாயான் திருநீறே!

6) அருத்தமதாவது நீறு;
அவலம் அறுப்பது நீறு;
வருத்தம் தணிப்பது நீறு;
வானம் அளிப்பது நீறு;
பொருத்தமதாவது நீறு;
புண்ணியர் பூசும் வெண்ணீறு;
திருத்தகு மாளிகை சூழ்ந்த
திருஆலவாயான் திருநீறே!

7) எயிலதுவட்டது நீறு;
இருமைக்கும் உள்ளது நீறு;
பயிலப்படுவது நீறு;
பாக்கியமாவது நீறு;
துயிலைத் தடுப்பது நீறு;
சுத்தமதாவது நீறு;

அயிலைப்பொலிதரு சூலத்(து)
ஆலவாயான் திருநீறே!

8) இராவணன் மேலது நீறு;
எண்ணத் தகுவது நீறு;
பராவணமாவது நீறு;
பாவம் அறுப்பது நீறு;
தராவணமாவது நீறு;
தத்துவமாவது நீறு;
அராவணங்கும் திருமேனி
ஆலவாயான் திருநீறே!

9) மாலொ(டு) அயன் அறியாத
வண்ணமும் உள்ளது நீறு;
மேலுறை தேவர்கள் தங்கள்
மெய்யது வெண்பொடி நீறு;
ஏலஉடம்(பு) இடர் தீர்க்கும்
இன்பம் தருவது நீறு;
ஆலமு(து) உண்டமிடற்(று)
எம் ஆலவாயான் திருநீறே!

10) குண்டிகைக் கையர்களோடு
சாக்கியர் கூட்டமும் கூடாக்
கண்டிகைப்பிப்பது நீறு;
கருத இனியது நீறு;
எண்டிசைப்பட்ட பொருளார்
ஏத்தும் தகையது நீறு;
அண்டத்தவர் பணிந்(து) ஏத்தும்
ஆலவாயான் திருநீறே!

11) ஆற்றல் அடல்விடை ஏறும்
ஆலவாயான் திருநீற்றைப்
போற்றிப் புகலி நிலாவு
பூசுரன் ஞானசம்பந்தன்
தேற்றித் தென்னன் உடல் உற்ற
தீப்பிணி ஆயினதீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும்
வல்லவர் நல்லவர் தாமே!

திருச்சிற்றம்பலம்

இந்தத் திருநீற்றுத் திருப்பதி கத்தை முதலில் மனப்பாடம் செய்து கொள்ள வேண்டும். இதில் உள்ள பல சொற்றொடர் களுக்குப் பொருள் விளங்காமல் இருக்கலாம். ஆனுல் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய தில்லை. விளங்கிய மட்டும் பொருளைச் சிந்தித்தவாறு, விபூதியைக்கையில் எடுத்துக் கொண்டு, மதுரைச் சொக்கேசப் பெருமானையும் அங்கயற்கண் அம்பிகையையும் தியானித்து, இந்தத் திருநீற்றுப்பதிகத்தை மனத்திற்குள்ளேயே ஓத வேண்டும்.

அப்படி நாள்தோறும் ஓதி அந்த விபூதியைத் தரித்துக் கொள்பவர்களுக்கு,வாழ்க்கையில் ஐஸ்வர்யம் பெருகும். மனத்தில் அமைதி பிறக்கும். உடலில் நோய்கள் நீங்கும். மற்றும், யார் யாருக்கு என்ன என்ன துன்பங்கள், கவலைகள், பயங்கள் இருக்கின்றனவோ, அவை அனைத்தும் உடனே விலகும். நம்முடைய நியாயமான ஆசைகள் எல்லாம் இனிதே நிறைவேறும்.

ஆகையால், நமது "அருள்" அன்பர்கள் அனைவரும் இப்பதி கத்தை ஆர்வத்தோடு கற்று, எப்போதும் நெற்றியில் நீறு அணிந்து நிறை வாழ்வு பெறுமாறு வேண்டுகிறோம்!

# ஞானசம்பந்தர் வழி வந்த சோமசுந்தரப் பெருமான்

## வேலவன்

மதுரைத் தெற்கு ஆவணிமூல வீதியிலே, வரலாற்றுப் புகழ் பெற்ற ஒரு மடாலயம் இருக்கிறது. அதுதான் திருஞான சம்பந்த ஸ்வாமிகள் ஆதினம் எனப் படுவது.

கி. பி. ஏழாம் நூற்றுண்டிலே, தமிழகத்தின் தென்பகுதியான பாண்டிநாடு முழுவதையும் சமண சமயம் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. அந்தத் திருநாட்டை ஆண்டுவந்த பேரரசனுகிய மாறவர்மன் சுந்தரபாண்டியன், தானே ஒரு சமணனுக மாறிவிட்டான். அரசனது வழியைப் பின்பற்றி, அந்நாட்டுக் குடிமக்களும் சமண சமயத்தைத் தழுவி வரலாயினர்.

ஆனுல், இருண்டவானிலே தனித்து நின்று விளங்குகிற இரு தாரகைகளைப் போல், அந்தப் பாண்டி நாட்டைக் கவ்வி நின்ற சமண இருளின் மத்தியில், இரண்டேயிரண்டு புனித உள்ளங்கள் மட்டும் தம் இயல்பான சிவநெறிப் பற்றை இழந்துவிடாமல், சிறந்த பக்திச் சுடர்களாய் இலங்கிக் கொண்டிருந்தன. அவர்களில் ஒருவர், மன்னனின் மாதேவியாகிய மங்கையர்க்கரசியார்; மற்றவர், அரசனின் தலைமை அமைச்சராகிய குலச்சிறையார்.

உமாதேவியார் மீனுக்ஷியாகவும், சிவபெருமான் சோமசுந்தரப் பெருமானுகவும், முருகவேள் உக்ரகுமாரனுகவும், மனித வடிவம் தாங்கி வந்து அரியணையில் அமர்ந்து முடிசூட்டிக் கொண்டு ஆட்சி புரிந்த தனிப்பெருஞ்சிறப்பு வாய்ந்தது பாண்டி நன்னுடு. அந்தத் தென்னுடுடைய சிவன் மரபில் வந்தவர்கள் பாண்டிய மன்னர்கள். அத்தகைய பெருமைக்குரிய திருக்குலத்தில் தோன்றிய தம் மன்னன், தன் மரபின் மேன்மையை மறந்து, சிவநெறியைத் துறந்து, சமணர்களின் போதனைகளிலே மதி மயங்கி நின்றது, மங்கையர்க்கரசியார் மந்திரியார் இவ்விருவரது மனத்தையும் வருத்தியது. அவனை மீண்டும் சைவ சமயத்துக்குத் திருப்புவது எப்படி என்பது தெரியாமல், அவர்கள் சிந்தை கலங்கித் தவித்தனர்.

அந்தச் சமயத்தில், சோழநாட்டிலே ஓர் அற்புதம் நிகழ்ந்திருப்பதாக அவர்களுக்கு ஒரு செய்தி கிடைத்தது. அதாவது—.

சீகாழியிலே, மூன்று வயதுடைய ஒரு குழந்தை அவ்வூர்த் திருக்குளத்தின் கரையிலே நின்று அழுவதைக் கண்டு, உமாதேவியார் மனமிரங்கிச் சிவபெருமானேடு அக்குழந்தைமுன்தோன்றி, தன் திருமுலைப்பாலை ஒரு பொற்கிண்ணத்தில் எடுத்து, அதனேடு சிவஞானத்தையும் குழைத்து, அக்குழந்தையின் வாயில் ஊட்டினராம். அன்று முதற் கொண்டு, அக்குழந்தை ஞானசம்பந்தன் எனப் பெயர் பெற்று, ஓதற்கரிய உயர் மறைப் பொருள்களையெல்லாம் பண்ணுர்ந்த தமிழ்ப் பதிகங்களாய்ப் பாடியவண்ணம், சிவனுறையும் திருக்கோயில்களையெல்லாம் தரிசித்தவாறு, ஆங்காங்கே பல அதிசயச் செயல்களையும் நிகழ்த்திக் கொண்டு வருகிறது என்று கேள்விப்பட்டனர் மங்கையர்க்கரசியாரும் மந்திரியாரும்.

உடனே அத் தெய்விகக் குழந்தைக்கு அவர்கள் ஒரு விண்ணப்பம் எழுதியனுப்பினர். ''அடிகளார் மதுரை நகருக்கு எழுந்தருளி வந்து, இங்கு சூழ்ந்துள்ள சமண் இருளைப் போக்கி, எங்கள் மன்னனையும் மக்களையும் மீண்டும் சைவர்களாக்கித் தரவேண்டும்'' என்று அவர்கள் அந்த விண்ணப்பத்தில் கோரியிருந்தனர்.

அப்போது திருஞான சம்பந்தர், சோழ நாட்டைச் சேர்ந்த வேதாரண்யம் என்னும் திருப்பதியிலே, தம்மைச் சூழ்ந்துள்ள அடியார்களின் திருக்கூட்டத்தோடு தங்கியிருதார். அப்பர் எனப்படுகிற திருநாவுக்கரசு நாயனுரும் அவரோடு கூட இருந்தார். அந்த சமயத்தில்தான், மதுரையிலிருந்து அரசியாரும் அமைச்சர் பிரானும் அனுப்பிய திரு ஓலை அங்கு வந்து சேர்ந்தது. அந்தத் திருஓலையைத் கண்டதும் உடனே மதுரைக்குப் புறப்பட்டார் திருஞானசம்பந்தர்.

மதுரையை அடைந்ததும், அவரும் அவரோடு வந்த அடியார் திருக்கூட்டமும், அங்குள்ள ஒரு திருமடத்திலே தங்கினர். வாகீசர் என்ற ஒரு முனிவர் பெருமான் (திருநாவுக்கரசருக்கும் வாகீசர் என்ற ஒரு பெயர் உண்டு. ஆனுல் இந்த வாகீசர் திருநாவுக்கரசர் அல்லர்.) வதிந்து வந்த மடம் அது. திருஞானசம்பந்தர் மீது பொறுமை கொண்ட சமணர்கள், அவர் தங்கியிருந்த அந்த மடத்துக்குத் தீவைத்தனர்.

குடிகள் செய்த பாபம் அரசனையே சாரவேண்டும் என்ற நியதிப்படி, அந்தத் தீயானது பாண்டிய மன்னனைப் ''பையப்'' போய்ப் பற்றுமாறு, ஞானசம்பந்தர் பதிகம் பாடியருளினர். உடனே பாண்டிய மன்னனின் உடலில், தாங்கொணுத கடுஞ்

சுரம் கண்டது. அந்தச் சுர நோயைத் தமது மணிமந்திர மருந்துகளால் போக்குவதற்கு, சமண முனிவர்கள் அரும்பாடு பட்டனர். ஆனால் இயலவில்லை. கடைசியாக, திருஞானசம்பந்தப் பெருமானே வந்து, அரசனின் வெப்பு நோயைப் போக்கியருள வேண்டியதாயிற்று.

அதைக் கண்டு கொதிப் படைந்த சமணமுனிவர்கள், ஞானசம்பந்தரை முதலில் அனல் வாதுக்கும் பின்னர் புனல் வாதுக்கும் அழைத்தனர். அவ் விருவாதுகளிலும் அந்த தெய்விகக் குழந்தையே வெற்றி பெற்றமையால், தாமே உரைத்த சூளுரையின்படி சமணர்கள் கழுவில் ஏற நேர்ந்தது. மன்னன் மாறவர்மன் சுந்தரபாண்டியன், மீண்டும் சைவ சமயத்தைத் தழுவினன் அவனது குடிமக்களும் சைவர்களாக மாறினர்கள். இவ்வாறு பாண்டிநாட்டை ஆட் கொண்டிருந்த சமண் இருள் ஒழிக்கப்பட்டதைக் கண்டு, பாண்டிமா தேவியும் குலச்சிறை யாரும் தம் மனக்குறை நீங்கி மகிழ்வெய்தினர்.

திருஞானசம்பந்தர் மதுரை யிலே தங்கியிருந்த அந்த (வாகீச முனிவரது) மடாலயம்தான், இன்று தெற்காவணி மூலவீதி எழுபதாம் எண்ணிலுள்ள திரு ஞான சம்பந்தர் ஆதினமாகக் காட்சியளிக்கிறது. ஞானசம்பந் தப் பெருமானால் நிறுவப்பட்ட அந்த ஒரு காரணத்தாலேயே, இந்த ஆதீனத்தின் பெருமை அளவிடற்கரியது என்று சொல்ல வேண்டும். தமிழகத்திலுள்ள மற்ற எல்லா ஆதீனங்களைக் காட்டிலும் இதுவே மிகமிகப் புராதனமானது என்பது, அதன் பெருமைக்குரிய இரண்டாவது காரணமாகும். இப்படி எத்தனை யோகாரணங்களை நாம் வரிசை யாக அடுக்கிக் கொண்டே போக லாம். எல்லாவற்றிற்கும்மேலாக, இப்போது அந்த ஆதீனத்தில் அமர்ந்து அருளாட்சி புரியும் குரு மஹாஸந்நிதானம் அவர்கள், பண்டைய ஞானசம்பந்தப்பெரு மானைப் போலவே, நாத்திக இருளையும் புறச்சமய மருளையும் போக்குவதற்கு இன்று அரும் பாடு பட்டு வருகிறார்கள் என் பது, அந்த ஆதீனத்துக்கே ஒரு தனிச் சிறப்பை அளிக்கிறது.

இந்த மடாலயத்திற்கு ஒரு முறை இராமலிங்க ஸ்வாமிகளே விஜயம் செய்திருக்கிறார். 288' வது குருமஹாஸந்நிதானத்தின் காலம் அது. இப்போது பீடாதி பதியாய் இருக்கும் திருவருள் தவ யோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசார்ய ஸ்வாமிகள், இந்த ஆதினத்தின் 291'வது குருமஹாசந்நிதானம் ஆவர். இவர்களுடைய திருவுரு வப் படம்தான், இவ்விதழின் முகப்பு அட்டையை அலங்கரிப் பதாய் காட்சியளிக்கிறது.

இவர்கள், 1902ஆம் ஆண் டிலே, அம்மைய நாயக்கனூரில் சித்தாந்தப் பேராசிரியர் வைரவ

நாதப்பிள்ளையவர்களின் மூன்று வது குமாரராகத் தோன்றியவர். இவர்களது இயற்பெயர் சோம சுந்தரம்பிள்ளை. பாளையங் கோட்டை செயின்ட் சேவியர் உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். சி. வரை படித்து முடித்து விட்டு, இவர்கள் தம்முடைய பத்தொன்பதாவது வயதில் இலங்கை சென்றுர்கள். அங்கே 1926ல் சுந்தரம் அண்டு கம்பெனி என்ற பெயரால் ஒரு சிறிய சூப்பர் மார்க்கட்டை நிறுவி, பின்பு அதையே ஐந்து லக்ஷ ரூபாய் மூலதனத்தோடு கூடிய ஒரு பெரிய லிமிடெட் கம்பெனி ஆக்கினுர்கள். பல துறைப்பட்ட வியாபாரங்களின் வாயிலாக, ரூபாய் இருபதுலக்ஷம் வரை பொருள் ஈட்டினுர்கள். பின்னர் தம் வியாபாரம் அனைத்தையும் தமது இளைய சகோதரராகிய கணபதி என்பவரிடம் ஒப்படைத்து விட்டு, மதுரைக்கு வந்து, 1953 மே 28 தேதியன்று மதுரைத் திருஞானசம்பந்த ஸ்வாமிகள் ஆதீனத்தின் இளவரசாகப் பட்டாபிஷேகம் பெற்றுர்கள். அப்போது ஆதீன கர்த்தராக இருந்த பெரியவர்கள் 1957'ல் சமாதி எய்தவே, அந்த ஆட்சி பீடத்தில் 291வது குரு மஹாஸந்நிதானமாக இவர்கள் வந்து அமர்ந்தார்கள்.

இவர்கள் வந்த பிறகு, அந்த ஆதீனம் பல்வேறு வகைகளில் சிறப்புற்று விளங்குகிறது. முக்கியமாக, அந்த ஆதீனத்தின் தளர்வுற்ற நிலையைப் போக்குவதற்காக, ஆரம்பத்திலேயே இவர்கள் தம் சொந்தப் பணத்திலிருந்து இரண்டு லக்ஷ ரூபாய் நன்கொடை வழங்கியுள்ளார்கள். அத்துடன், குலசேகரப் பட்டினத்தில் ஒரு லக்ஷரூபாய் செலவு செய்து, திருவருள் உயர்நிலைப்பள்ளி யென ஒரு கல்வி நிலையத்தை நிறுவியுள்ளார்கள். இப்படி எத்தனையோ தருமங்களுக்கு, அவர்கள் (ஆதீனப்பணத்தில் அல்லாமல்) தம் சொந்தப் பணத்திலிருந்தே ஏராளமாகச் செலவு செய்திருக்கிறார்கள். சைவ மடாலயங்களின் வரலாற்றில், இதனை ஒரு புதுமை யென்றே சொல்ல வேண்டும்.

பூர்வாசிரமத்தில், ஸ்ரீமஹா ஸந்நிதானம் அவர்கள் ஒரு மாபெரும் தொழில் பிரமுகராக மட்டுமன்றி. இலங்கையிலே ஒரு புகழ் பெற்ற டென்னிஸ் சாம்பியனாகவும் விளங்கியிருக்கிறார்கள். எனினும், இப்படியெல்லாம் இருக்கும் போதே, 1948'ல் அவர்கள் அங்கு ஒரு கூட்டுவழிபாட்டுப் பணியைத் தொடங்கி நடத்தி வந்திருக்கிறார்கள். ஒருவர் முன்பாட, மற்றவர் பின்பாடுவது என்னும் அந்த உயரிய வழிபாட்டை, அவர்கள் இன்றைக்கும் தவறாது நடத்தி வருகிறார்கள். மதுரை மீனாக்ஷிகோயிலில் உள்ள கரியமாணிக்கப்பெருமாள் மண்டபத்தைக் கூட்டுவழிபாட்டு மண்டபமாக்கி, திங்கட்கிழமை தோறும் மாலை வேளையில் அங்கு தம் குழுவினருடன் சென்று தோத்திரப் பாடல்களை ஓதிவருகிறார்கள்.

செவ்வாய்க்கிழமைகளிலும் வெள்ளிக்கிழமைகளிலும், ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்கள், மாலை வேளைகளில் பல ஓதுவாமூர்த்திகள் தேவாரம் இசைக்க, மதுரைத் திருக்கோயிலின் ஆடி வீதிகளிலே வலம் வருகிறார்கள்.

புதன்கிழமை தோறும் மாலை வேளையில் ஆதீன மடத்திலே கூட்டுவழிபாடும், ஸ்ரீமஹாஸந்நிதானத்தின் திருக்குறள் சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன.

வியாழக்கிழமைதோறும் ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்கள் தகுதி வாய்ந்த மாணவர்களுக்கு மெய்கண்ட சாத்திரங்களில் பாடம் நடத்துகிறார்கள்.

சனிக்கிழமை தோறும் ஸ்ரீ மஹா ஸந்நிதானம் அவர்கள் சமயப் பிரசாரத்தில் ஈடுபடக் கூடிய பல மாணவ மாணவிகளுக்குப் பேச்சுப் பயிற்சி அளிக்கிறார்கள்.

ஞாயிற்றுக்கிழமைதோறும் ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்கள், தம்மைத் தலைவராகக் கொண்டுள்ள இந்து தர்ம பிரசார சங்கத்தின் சார்பில், மதுரையிலும் அதன்

சுற்றுப்புறங்களிலுமுள்ள சிவாலயங்களுக்கும் வைஷ்ணவத் திருக்கோயில்களுக்கும் தம் குழுவினருடன் சென்று, இந்து தர்மம், சைவ வைஷ்ணவ ஒற்றுமை போன்ற பல முக்கியமான பொருள்களைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றுகிருர்கள்.

இவர்களுடைய சொற்பொழிவுகளைக் கேட்டு, பிறமதத்தவர்கள் பலர் தம் பூர்வீகச் சமயமாகிய இந்து மதத்துக்கு மாறி வந்திருக்கிருர்கள் என்பது, இங்கு குறிப்பிடத் தக்கது.

திருஞானசம்பந்தர் போன்ற மகான்கள், மாற்றுச் சமயங்களில் புகுந்து விட்ட நம் தமிழ் மக்களை மீட்டுச் சைவ சமயத்தினை வளர்ப்பதற்காக. அக்காலத்தில் பல அற்புதச் செயல்களை நிகழ்த்தியிருக்கிருர்கள். அதே போல இக்காலத்தில், அதே குறிக்கோளைக் கருத்திற்கொண்டு ஓர் அற்புதம் நிகழ்த்தி வருகிருர் மதுரை ஆதீன அடிகளார். அது தான் ஆவியுலகத்தோடு தொடர்பு கொண்டு, அந்த ஆவிகளின் வாயிலாகப் பல செய்திகளை அறிந்து சொல்லுகிற அதிசயச் செயல்.

உடலுக்கு வேருக, உயிர் என ஒன்று இல்லவேயில்லையென்று சொல்பவர்கள் நாத்திகர்கள். உயிர் என்ற ஒரு தனிப்பொருள் உண்டு என்பதாக ஒப்புக் கொண்டு விட்டால், உடல் இறந்த பிறகு அந்த உயிரின் கதி என்ன ஆகிறது என்னும் கேள்வி எழும். அந்தக் கேள்விக்குப் பதில் கூற இயலாத காரணத்தால், நாத்திகர்கள் ''உடல் அழியும் போதே உயிரும் அழிந்து விடுகிறது'' என்று ஒரே வார்த்தையில் கூறிவிடுவார்கள்.

உடல் அழியும்போது உயிரும் கூடவே அழிந்து விடுவதில்லையென்னும் உண்மையை, ஆவியுலகத் தொடர்பின் மூலம் நிலைநாட்டி வருகிருர்கள் மதுரை ஆதீன அடிகளார். அந்த உண்மை அவ்வாறு நிலைநாட்டப் படும் போது, நாத்திக வாதத்தின் அடிப்படையே தகர்ந்து போய் விடுகிறது. எனவே, மனிதன் ஆவியுலகத்தோடு தொடர்பு கொள்ள முடியும் என்பதை அடிகளார் மெய்ப்பித்து வருவது, நாடெங்கிலும் பரவி வருகிற நாத்திக இருள் ஒழிக்கப்பட வேண்டும் என்பதற்காகத்தானேயன்றி, நாமெல்லாம் முழுமுதற் கடவுளாகிய சிவபரம் பொருளை மறந்துவிட்டுச் செத்துச் செத்துப் பிறக்கின்ற சிற்றுயிர்களாகிய ஆவிகளை உபாசனை செய்யவேண்டும் என்பதற்காக அல்ல.

உடலுக்கு வேருக உயிர்என ஒன்று இருந்து, அதுவே இந்த உடலை இயக்குகிறது என்று மெய்ப்பிக்கப்படும் பொழுது, உலகத்துக்கே வேருக இறைவன் என ஒருவர் இருந்து, அவனே இந்த உலகை இயக்கிக் கொண்டிருக்கிருர் என்னும்உண்மையை, பெரிய படிப்பாளிகள் என்று

கருதப்படுகிற பகுத்தறிவாளர்களாலும் கூட மறுக்க முடிவதில்லை. அதனால், அடிகளாரின் ஆவியுலகத் தொடர்பானது, எண்ணற்ற நாத்திகர்களை ஆத்திகர்களாக மாற்றி விட்டிருக்கிறது.

அது மட்டுமல்ல. ஆவியுலகத் தொடர்பின் மூலம், உயிர்களுக்கு மறுபிறவி உண்டு என்பதையும் அடிகளார் தெளிவாக நிருபித்துக் காட்டி வருகிறார்கள். அதன் விளைவாக, இந்துக்களின் மறுபிறவிக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாத பல கிறிஸ்துவர்களும் முஸ்லீம்களும்கூட, இப்போது இந்துக்களாக மாறியிருக்கிறார்கள். இன்னும் மாறிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு மனிதனின் வாழ்க்கை எப்படி அமைந்திருக்கும் என்பது, அவன் இவ்வுலகில் பிறப்பதற்கு முன்னமேயே இறைவனால் வகுக்கப்பட்டாகி விடுகிறது என்பது இந்து மதத்தின் கோட்பாடு. இந்தக் கோட்டை நிலைநாட்டுவதற்காகவே பண்டைக் காலத்து மஹரிஷிகளால் எழுதி வைக்கப் பட்ட சில அரிய நூல்கள் இருக்கின்றன. அவற்றிற்கு நாடி சாஸ்திரங்கள் என்று பெயர்.

கடவுள் உண்டு என்னும் ஆஸ்திக மதத்திற்கும், உயிர்களுக்கு மறு பிறவி உண்டு என்னும் இந்து மதத்திற்கும் ஆதாரமாக, ஆவியுலகத் தொடர்பினை மட்டுமல்லாது, இந்த நாடி சாஸ்திரங்களையும் அழகாகப் பயன்படுத்தி வருகிறார் நமது அடிகளார். முற்காலத்தில் வேதநெறி தழைத் தோங்கவும் மிகு சைவத்துறை விளங்கவும் திரு அவதாரம் செய்த திருஞானசம்பந்தப் பெருமானைப் போலவே, இக்காலத்தில் ஆஸ்திகத்தையும் இந்து மதத்தையும் வளர்ப்பதில் மிகத் தீவிரமான ஆர்வம் கொண்டு அல்லும் பகலும் அரும் பணி புரிந்து வருகிறார் தவயோகச் செல்வர் சோமசுந்தரப்பெருமான். அந்த முறையில், தமிழ்கூறு நல்லுலகம் இவருக்குப் பெரிதும் கடப்பாடு உடையதாய் இருக்கிறது.

அடிகளார் முதன் முதலாக *1943*'ல் தம் தந்தையாரின் ஆவியோடு பேசத் தொடங்கினார். அப்போது ஏற்பட்ட அந்த ஆவியுலகத் தொடர்பின் மூலம், பெரும் பெரும் லக்ஷாதிபதிகள் பலர் இருளுலகத்தில் கிடப்பது அவருக்குத் தெரிய வந்தது. உடனே, செல்வத்தால் பயனில்லை யென்று தெளிந்து, லக்ஷ லக்ஷமாய் வருவாயைத் தந்து கொண்டிருந்த தம் தொழில் துறையைப் புறக்கணித்துவிட்டு, அவர் துறவு நெறியை மேற் கொண்டார்.

*1946*'ல் இந்திய வேதாந்த சங்கத்தின் (Indian Philosophical Congress) கூட்டத்திலே, இவர் தமது ஆவியுலக ஆராய்ச்சிகளைப் பற்றி விளக்கிக் கூறினார். அந்தக் கூட்டத்திலிருந்த பெரிய பெரிய அறிவாளிகளெல்லாம், இவரது கருத்துக்களை ஒப்புக் கொண்டனர். குறிப்பாக, காசி இந்து சர்வகலாசாலையைச் சேர்ந்த மனோதத்துவப் பேராசிரியர் அட்ரியா என்பவர், இவரது நுண்ணிய அறிவுத் திறனையும் ஆழ்ந்த ஆராய்ச்சித் திறனையும் கண்டு பெருவியப்பு எய்தினார். அதன் பிறகுதான், தாம் கண்ட உண்மைகளை உலகறியப் பரப்ப வேண்டும் என்ற எண்ணம் நம் அடிகளார்க்கு ஏற்படலாயிற்று.

ஆவியுலக ஆராய்ச்சிகளைப் பற்றி, அடிகளார் ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார்.

இன்னும் வெளியிட இருக்கிறார். நாள் ஒன்றுக்கு ஆறுபடி விபூதியே செலவாகிக் கொண்டிருந்த மதுரை மீனாக்ஷிசுந்தரேஸ்வரர் திருக்கோயிலில், இவருடைய சைவசமயப் பிரசாரத்தின் விளைவாக இப்போது நாள்தோறும் அறுநூறுபடி விபூதி செலவாகி வருகிறது. திருநீற்றுப் பதிகம் பாடிய திருஞானசம்பந்தப் பெருமானது ஆதீனபீடத்தை அலங்கரிப்பதற்கான உயர் தகுதியை நம் அடிகளார் பரிபூர்ணமாகப் பெற்றுள்ளவர் என்பதற்கு, இதைக் காட்டிலும் வேறு என்ன சான்று வேண்டும்?

*1969*'ல் திருப்பதியிலே இந்து தர்மப் பிரதிஷ்டானம் என ஒன்று நிறுவப் பெற்றுள்ளது. காஞ்சி காமகோடிப் பெரியவர்கள், திருப்பதி ஜீயர், உடுப்பி பேஜவார் மடத்து ஸ்வாமிகள், இராகவேந்திரரின் மந்திராலய மடத்து ஸ்வாமிகள் ஆகியோருடன், நமது மதுரை ஆதீன அடிகளாரும் அதில் ஓர் உறுப்பினராக இருந்து வருகிறார். அதைத் தவிர, குலசேகரப் பட்டினம் திருவருள் தொண்டர்சபை, மதுரைத் திருவருள் தவநெறி மன்றம், சென்னை இந்து தர்மபிரசார சங்கம் போன்ற பல்வேறு நிறுவனங்களுக்கு அவர் தலைவராக இருந்து வருகிறார். அவரும் அவரது சமயத் தொண்டும் நீடூழி வாழுமாறு, மதுரைச் சொக்கேசப் பெருமானைத் துதிப்போமாக! ○

# அருளாசியுரை

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாசார்யஸ்வாமிகள்



உலகத்திலே பிறந்து வளர்ந்து வாழ்ந்து வருகின்ற உயிர் வர்க்கங்களிலே, மனிதராய்ப் பிறத்தலே அரிதிலும் அரிது என்பதை யாவரும் அறிவர்.

அது, பெரிய சமுத்திரத்தைக் கையினுலே நீந்திக் கரையேறுதல் எவ்வளவு அரிதோ, அது போன்ற தாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக, சைவ சித்தாந்தச் செந்நெறி யிலே நின்று, சிவனருளாலே சிவனை வணங்கும் பேறும், முறையாகச் சிவபூசை செய்து

வழிபடும் பேறும் உண்டாகுமானால், அதுவே அரிதிலும், அரிதிலும், அரிதிலும் அரிதாம்.

அதுவே நாம் பிறந்த பிறவியின் பயனை, ஒரே பிறவியில் பெற்றுக் கொள்ளச் செய்யும் வாயிலும் உபாயமுமாகும்.

தவமும் தவமுடையார்க்கு ஆகும் என்ற முறைப்படி, யார் யாருக்கு அதற்குரிய தவம் இருக்கிறதோ, அவர்களே அதில் நாட்டமுடையவர்களாகத் திகழ்வர்.

சிவபூசையின் மகிமையையும் அதனால்தான் அடையும்பேற்றினையும் ஒருவன் உள்ளவாறு அறிந்து கொண்டால், முன்னைத் தவம் எதுவாக இருந்தாலும், இந்தப் பிறவியிலாவது அவன் கடைத்தேறும் வழியைப் பின்பற்ற ஆசை கொள்ளாதிருக்க முடியாது.

பாவம் செய்யாதவர்களுக்குத் துன்பமே கிடையாது. ஆனால் பாவம் செய்யாது பிறந்தவர்கள் யாரும் இல்லை.

வியாதிக்கு மருந்தும், விடத்திற்கு மந்திரமும் எவ்வாறு கைகண்ட பலனைத் தருகின்றதோ, அதேபோல் துன்ப நீக்கத்திற்குப் பிரார்த்தனை கைகண்ட பலனைத் தருகின்றது.

ஆண்டவனது ஆட்சியில், வழிபடுகின்றவர்களுக்கும்,வழிபடாத மக்களுக்கும், ஏனைய ஓரறிவு முதல் ஐயறிவுவரை பெற்ற மிருகாதிகளுக்கும், வேண்டியஉணவுப் பொருள்களும், போகப் பொருள்களும், வசிக்கின்ற நிலம், குடிக்கின்ற நீர், உபயோகிக்கின்ற நெருப்பு, சுவாசிக்கின்ற காற்று, சூரிய வெளிச்சம் முதலான பொது உபகாரம் செய்தே வாழ உதவிபுரிகிறார்.

ஆனால் எவனொருவன் ஆண்டவனது ஆட்சியையும், அவனது கருணையையும் உணர்ந்து, தான் செய்த குற்றத்தினால் வருகின்ற துன்பத்தை போக்கியருள வேண்டுமென்று பிரார்த்திக்கின்றானோ, அவனுக்கு மட்டும் தடையின்றிச்சிறப்பு உபகாரமும், உதவியும் புரிந்து வருகின்றார்.

எவனொருவன் தீட்சை பெற்று, அவனது திருநாமத்தைச் செபித்து வருகின்றானோ, அவனது மனத்திலுள்ள இருளைத்திருவருட் சக்தியால் நீக்கி, ஞானத்தை உண்டாக்கி, அஞ்ஞானத்தினால் வருகின்ற மனக்கவலைகளையெல்லாம் ஒழித்து அருள்பாலிக்கின்றார்.

மேலும் எவனொருவன் சிவபூசை செய்கின்றானோ, அவனுக்கு எல்லோருக்குமுள்ள பொது உபகாரமும், பிரார்த்தனை செய்பவர்களுக்குரிய சிறப்பு உபகாரமும், தீட்சை பெற்று நாமசெபம் செய்து வருபவர்களுக்குரிய மனக்கவலைகளை மாற்றுகின்ற உபகார

மும் தவிர, எப்பேர்ப்பட்ட பிரமகத்தி தோடத்தையும் நீக்கி, புண்ணியப் பேற்றினல் பெறு கின்ற புகழையும், பதவிகளையும் தவருது கொடுத்து, தன்னைச் சிரங்குவித்து வணங்குகின்ற அவனைப் பிறர் வணங்கித் துதிக் கின்ற நிலைகளில் ஏற்றி வைக் கின்ருர்.

சிவலிங்கம் மூன்று கூறுகளை உடையது. அடிப்பாகம் பிரம்ம பாகம். மத்திய பாகம் விஷ்ணு பாகம். மேல்பாகம் உருத்திர பாகம். மூன்றும் சேர்ந்தால்தான் சதாசிவம் என்றும், சிவலிங்கம் என்றும் பெயர்பெறும்.

ஒருவனைக்கொன்ற பிரம்மகத்தி தோடமும், அதனுல் விளைகின்ற கேடும் போல, வேறு ஒரு தோட மும் கேடும் உலகத்தில் கிடை யாது.

பிரம்மகத்தி தோடம் நீங்க வேண்டுமென்ருல், சிவலிங்க பூசையைத் தவிர வேறு எந்த மூர்த்தியினுடைய பூசையாலும் நீக்கிக் கொள்ள முடியாது என்பதனுலேயே, கஜமுகா சுரனைக் கொன்ற விநாயகர் சிவ பூசை செய்து வருகிருர். சூர பத்மனைக் கொன்ற முருகப் பெருமான் சிவபூசை செய்து வருகிருர். இராவணனைக்கொன்ற இராமபிரான்இராமேஸ்வரத்தில் சிவலிங்க பூசை செய்து வருகிருர். மகாவிஷ்ணுவும் சக்தி அம்ச மாகிய அறம்வளர்த்த நாயகியும் எப்பொழுதும் சிவபூசை செய்து வருகிருர்கள். தேவர்களுக் கெல்லாம் அரசனுகிய இந்திரனும் மற்றுமுள்ள தேவர்களும் முப்போதும் முடிசாய்த்துச் சிவ பூசை செய்து வருகிருர்கள்.

"பெறுதற் கரிய
பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய
பிரானடி பேணுர்
பெறுதற் கரிய
பிராணிகளெல்லாம்
பெறுதற் கரிய
பேறிழந்தாரே"

என்ற திருமந்திரம், திருமூலர் மக்கள்பால் கொண்டிருந்த அனுதாபத்தின் உச்ச நிலையில் பிறந்த அமுத வாக்காகும்.

ஆதலால், எல்லோரும் சிவ பூசையின் மகிமையையும், அதனுல் ஏற்படும் அரிய பேற் றினையும் உணர்ந்து, சிவ பூசையை மேற்கொண்டு, எல்லா நலங்களையும் பெற்றுத் திகழ்தல் இன்றியமையாத காரியமாகும்.

அதற்கு வேண்டிய வைராக்கிய சித்தத்தையும், சகல வசதி களையும், அங்கயற்கண்ணி பங் கனும் ஆலவாய் அண்ணல் திருவருள் பாலித்து, எல்லோ ருக்கும் அருளவேண்டுமென்று பிரார்த்தித்து ஆசீர்வதிக் கின்றேம்.

○

# இதிகாச இலக்கியங்களிலே ஆவியுலகச் செய்திகள்

உயிர் என்பது அறிவித்தால் அறியும் ஆற்றலுடையது. அது என்றும் காண முடியாத உருவமற்ற சிற்சக்தி.

ஆவி என்பது உருவமுள்ளதும், பாரமில்லாததுமான சூக்குமஉடம்பு. ஆவி உடம்பு சொப்பன நிலையில் யாவரும் காணக்கூடியது. ஆதலால் ஆவியை உயிர் என்று எண்ணுதல் கூடாது. அவ்விதத் தவறு உள்ளத்தில் ஏற்படக் கூடாது என்பதற்காகவே, ஆவி என்று மட்டும் குறிப்பிடாமல், எல்லா இடங்களிலும் ஆவி உடம்பு அல்லது ஆவி உடல் என்றே குறிப்பிட்டிருக்கிறோம்.

பெயரிடப்பெற்றிருப்பது உருவமில்லாத உயிருக்குமல்ல. உருவமும் பாரமும் உள்ள ஸ்தூல சரீரத்திற்கு மல்ல. உயிரும் ஸ்தூல சரீரமும் சேர்ந்து ஜீவிக்கும் நிலைக்கும் அல்ல.

சொப்பனத்தில் சகலவிதமான இன்ப துன்பங்களையும் அனுபவிக்கின்ற, பாரமில்லாத ஆவி ரூபத்திலுள்ள ஆவி உடம்பிற்கே பெயரிடப்பெற்றிருக்கிறது. அந்த ஆவி உடம்பையே, யாதனுசரீரம், சூக்கும சரீரம், பிராணமய கோசம், உள்ளுடம்பு, புகழுடம்பு, சொப்பன உடல் என்றும் கூறுவர்.

ஆங்கிலத்தில் நல்ல ஆவிகளாக இருந்தால் "Ghost" "Spirit" "Apparition" "Spectre" என்றும்; கெட்ட ஆவிகளாக இருந்தால் "Demon", "Devil" என்றும் கூறுவர்.

பெயரிடப்பெற்றிருக்கிற அந்த ஆவி உடல் நமது பாரமுள்ள சரீரத்தில் இருக்கும்வரை, இந்தச் சடலமும், உள்ளிருக்கின்ற அந்த ஆவிஉடம்பின் பெயரையே பெற்றிருக்கிறது. அதனாலேயே, ஆவி உடம்பு பிரிந்த பின், அசைவற்றுக் கிடக்கின்ற சடலத்திற்குப் பிணம், சவம், கட்டை என்ற பொதுப் பெயர் கொடுக்கப்படுகின்றது.

பிரிந்துபோன ஆவி உடலுக்குப் பெயரும், ஆண் பெண் உருவமும், அவயவங்களும், தொடர்ந்த வாழ்வும் இருப்பதால், அதற்குரிய பெயரைச் சொல்லி, இன்னார் சிவலோகம் அல்லது வைகுண்டம் சேர்ந்தார் அல்லது சேர்ந்தாள் என்று

சொல்லுகின்றோம். உற்றார் உறவினருக்கு அவ்வாறே கடிதம் எழுதி அறிவிக்கின்றோம். இவ்வுலகில் யாரும் இறந்துவிட்டதாக எழுதுவதே கிடையாது.

இதனை விளக்க இரண்டு உதாரணங்கள் சொல்லலாம். ஒன்று பாம்புகளின் சட்டையும், மற்றது பறவைகளின் முட்டையுமாகும்.

ஒரு இடத்தில்ஒரு நல்லபாம்பு, ஒரு சாரைப்பாம்பு, ஒரு விரியன் பாம்பு இருப்பதாக வைத்துக் கொள்வோம். அவை மூன்றும் சட்டை கழற்றாமல் இருந்த பொழுது, அந்தச் சட்டையையும், உள்ளிருந்த பாம்பின் பெயரையும் சேர்த்தே, இன்ன பாம்பு என்று சொல்லுகின்றோம். அவை சட்டைகளைக் கழற்றிப் போட்டு விட்டுப் போய்விடுமானால்,வெளியேறிப்போன பாம்புகளுக்குத் தான் அந்தந்தப் பெயர் உண்டு.

தவிரவும், கழற்றிக் கிடக்கிற சட்டைகளுக்குப் பொதுவான "சட்டை" என்ற பெயர்தான் வழங்கப் பெறுகிறது. உள்ளிருந்த பாம்பின் பெயரை அவற்றிற்குச் சொல்லிக்கொள்வது கிடையாது.

அதுபோலவே, பலவிதப் பெயருடைய பறவைகள் முட்டைகளிலிருந்து வெளிப்பட்டுவிட்டால், வெளியே வந்த பறவைகளுக்குத் தான் தனித் தனிப் பெயர் சொல்வோமே தவிர, அம்முட்டைகள், உள்ளிருந்த பறவைகளின் பெயரைப் பெறாமல், பொதுவாக முட்டை என்றே அழைக்கப்பெறும். குஞ்சு வெளியாவதன்முன், அப்பறவைகளின் பெயர் சொல்லியே, அது காக்கை முட்டை, குயில் முட்டை, மயில் முட்டை என்று சொல்லப் பெறும்.

நான்கு பேர் தூக்கவேண்டிய பாரமுள்ள நமது சடலத்தை, பாரமில்லாத நமது ஆவி உடல் தூக்கித்திரிய வேண்டியிருக்கிறது. அதனால் ஏற்படும் அலுப்புத்தீர, ஆவி உடலுக்குத் தூக்கம் இன்றியமையாததாக இருக்கிறது.

பல நாட்கள் உணவில்லாமல் கூட வாழலாம். ஆனால் இரண்டு நாட்கள் சேர்ந்தாற்போல் தூக்கமின்றி வாழ முடியாது.

உயிரானது ஆவி உடலின் புருவ மத்தியாகிய லலாடஸ்தானத்தில் தொடர்புகொண்டு தொழிற்படும் பொழுது, நமது பாரமுள்ள உடலின் மூலம் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றது.

நமது சரீரத்திற்குள்ள தோலுணர்வுக்கு மூலஸ்தானம் தலையின் பின்புறம் இருப்பதாலும், நாக்கு மூக்கு, கண், காது முதலிய கருவிகள் முகத்தில் இருப்பதாலும், அவற்றின் மூலம் ருசி. வாசனை, உருவம், சப்தம் முதலியவற்றை உணரவேண்டியிருப்பதாலும், விழிப்பு நிலையில் புருவ மத்தியின் தொடர்பினால், ஆவிஉடலானது ஸ்தூல உடல்

மூலம் சகல காரியங்களையும் செய்கின்றது.

சொப்பனம் காணும் பொழுது, உயிரானது ஆவி உடம்பின் புருவ மத்தியிலிருந்து கண்டஸ்தானமெனப்படும் கழுத்திற்கு இறங்கி, அங்கு ஆவி உடலை மட்டும் தொழிற்படுத்தி இன்ப துன்பங்களை நுகர்கின்றது.

ஸ்தூல உடலிலுள்ள உணர்வு அப்பொழுது இருப்பதில்லை. அதற்குக் காரணம், ஸ்தூல உடலுக்கு உணர்ச்சி தருகின்ற ஆவி உடம்பின் தொடர்பு ஓரளவு நீங்கியதே யாகும். அந்த நிலையில் ஸ்தூல உடல் தொழிற்படாமல் ஒய்வு பெறுகின்றது.



ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாச்சார்ய ஸ்வாமிகளும், ஆதீன வித்வான் திருமுருக கிருபானந்த வாரியார் ஸ்வாமிகளும்.

ஆனால், ஆவி உடல் சொப்பனத்தில் தனித்துத் தொழிற்பட்டுப் பல காரியங்களையும் செய்து கொண்டிருப்பதால், அந்த உடல் முழு ஒய்வுபெற்றுக்கொள்ள முடிவதில்லை. பாரமுள்ள சடலத்தைத் தூக்கித் திரிய வேண்டியதாகவுள்ள சுமையானது சொப்பன நிலையில் ஆவி உடலுக்கு நீங்கப்பெறுகின்றதே தவிர, பாரமில்லாத அந்த ஆவி உடல் தொழிற்படாமலில்லை.

அதுவும் தொழிற்படாமல் இருக்க வேண்டுமானுல், உயிரானது மேலே சொன்ன கண்ட ஸ்தானத்திலிருந்து இறங்கி, ஆவி உடம்பின் இருதய ஸ்தானத்தில் தனது சம்பந்தத்தை வைத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது, ஆவி உடலும் தொழிற்படாமல் முழு ஓய்வு பெற்றுக் கொள்ளுகிறது. அதைத்தான் உண்மையான, நிம்மதியான தூக்கநிலை அல்லது சுழுத்திநிலை என்கிருேம்,

இன்னும் அதற்குக் கீழே உயிரானது நாபியில் (தொப்புளில்) நிற்கும்பொழுதுள்ள துரிய நிலையையும், மூலாதாரத்தில் நிற்கும் பொழுதுள்ள துரியாதீத நிலையையும், சொல்லவும் எழுதவும் முடியாது.

சொப்பனத்தில் தொழிற்படுகின்ற ஆவி உடல், விழிப்பு நிலையில் ஸ்தூல உடல் மூலம் இன்ப துன்பம் அனுபவிக்கின்றதை ஜாக்கிரம் என்று வடமொழியிலும், நனவு என்று தமிழிலும் சொல்லுகின்ருேம்.

ஆவி உடலும் தொழிற்படாமல், இன்ப துன்பம் ஒன்றும் அனுபவியாமல் நிம்மதியாகத் தூங்குவதை, சுழுத்தி என்று வடமொழியிலும், ஆழ்ந்த தூக்கம் என்று தமிழிலும் சொல்லுகின்ருேம்.

ஆகவே உயிர் எப்பொழுதும் தூங்குவதில்லை. ஆவி உடல்தான் நிம்மதியாகத் தூங்குகின்றது. தூங்கும்பொழுது, ஸ்தூல உடலின் உதவியின்றி சொப்பனத்தில் உயிரானது ஆவி உடல் மூலம் இன்ப துன்பம் அனுபவிக்கின்றது. விழிப்பு நிலையில் உயிரானது ஆவி உடலைக்கொண்டே ஸ்தூலஉடலை இயக்கி, அதன் மூலம் இன்ப துன்பம் அனுபவிக்கின்றது..........

50 ஆண்டுகளுக்கு முன், மதுரையில் வசிக்கின்ற மக்களிடம், இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும், ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் நிகழ்த்துகின்ற சொற்பொழிவுகளை, நம்முடைய வீட்டிலிருந்து கொண்டே, ஒரு ரேடியோக் கருவி மூலம், அதே விநாடியில் கேட்கலாமென்று யாராவது சொல்லியிருந்தால், அப்படிச் சொல்லுகின்றவருக்குப் பயித்தியமாக இருக்கவேண்டுமென்று எல்லோரும் சொல்லி, அவரை எள்ளி நகையாடியிருப்பர் அல்லவா?

அப்படிப் பயித்தியப் பட்டம் பெற்ற அவர், மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்கும் பொருட்டு ஒரு ரேடியோ பெட்டியை அவர்கள் மத்தியில் வைத்து, ஒவ்வொரு தேசத்திலிருந்து பேசுவதையும் கேட்கும்படி செய்தால், அவரை ஒரு மந்திரவாதி அல்லது தந்திரவாதி என்றும், சாத்தானுடைய வேலை, மனிதர்கள் பேசவில்லை—ஒருவேளை பேசுவது பேய்களாக இருக்கலாம் என்றும்கூட, கொஞ்சமும் தயங்

காமல் சொல்லியிருக்கவும் செய் வர் அல்லவா?

ஆனுல் இன்றோ நாம் ஒவ் வொரு ஊரிலும் ரேடியோக் கரு விகள் மூலம் தம் தம் வீட்டிலே இருந்து கொண்டே, அகில ் உல கச் செய்திகளைக் கேட்டு, ஆனந்த மாக அனுபவித்துக்கொண்டிருக் கிறோம். ரேடியோ மூலம் இவ் விதம், உலகத்தில் எந்தப் பாகத் திலிருந்து ஒலி பெருக்கப்பெறு கின்ற செய்திகளையும் கேட்க முடியுமாவென்று இன்று ஒருவன் கேட்பானுனல்,அவனைப் படியாத முட்டாள் என்றும், பட்டிக் காட்டான் என்றும், அநாகரிகன் என்றும் சொல்லப் பின் வாங்க மாட்டோம் அல்லவா?

இன்று ஆவி உலகத்தவர் நம் மோடு பேச முடிகின்றது என்று நிருபிக்கப்பெற்றிருக்கிற உண் மைக்கும், நாம் அவர்களோடு பேசவும் தொடர்புகொள்ளவும், மேலுலகங்களில்நடைபெறுகின்ற காரியங்களை அறியவும் முடிகின் றது என்று நிரூபிக்கப்பெற்றி ருக்கிற உண்மைக்கும், அதே நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது.

ஆவி உடலின் தன்மையையும் பெருமையையும் அறியாதவர் களே, கனவு நிகழ்ச்சிகளையும் ஆவி உலக நிகழ்ச்சிகளையும் பொய்யென்று கூற முற்படுவர்.

ஆவி உலகத்தாரோடு பேசுத லும் தொடர்பு கொள்ளுதலும், பேய்களோடு பேசுதலும்

தொடர்பு கொள்ளுதலும் ஆகு மென்று, யாராவது இன்று கூறு வார்களானுல், அதுவும் அறியா மையின் கூற்ருகவே முடியும்.

ஆவி உலகத்தில் மரணத்தின் பின்னுள்ளஆவிஉடம்பே, ஸ்தூல உடம்பிற்குள் தங்கியிருந்து தூல உடல் மூலம் பேசிக்கொண்டிருக் கிறதென்று நிரூபிக்கப் பெறும் பொழுது, தூல உடலோடு ஒரு வரோடு ஒருவர் பேசுதலும், ஆய்ந்து பார்க்கின் பேய்கள் ஒரு வரோடு ஒருவர் பேசுதலாகவே அமைந்துவிடும்.

ஆனதால் அவ்விதம் கூறுகின்ற வர், தமக்குத் தாமே பேய்ப் பட் டம் சூட்டிக்கொள்வதோடு, மனிதவர்க்கத்திற்கே அந்தப் பட் டத்தைச் சூட்டிய பாவத்திற்கும் பழிக்கும் ஆளாகின்றனர் என்பது தெளிவாகும்..........

வியாசருடைய ஸ்ரீமகாபார தம், 15-வது ஆசிரமவாச பர்வத் தில், திருதராஷ்டிரன், இறந்து போன தன் மைந்தரைக் கண்டு பேசியது பற்றிக் கூறியிருப்பதை உற்று நோக்க வேண்டும்;

இந்த அதிசயம் கண்டவரும் கேட்டவரும் யாவரும் வியப்ப டைந்தனர். விதுரருடைய ஜன்ம விசேஷத்தைப் புகழ்ந்தனர்.

பாண்டவர்கள் அங்கே சில நாள் தங்கியிருந்தனர். அச்சமயத் தில் வியாசர் தோன்றினுர். அவ ரைக் கண்டு திருதராஷ்டிரன்

இறந்துபோன தன் மைந்தரைக் காண விரும்புவதாகத் தெரிவித்தான். காந்தாரியும் கேட்டுக் கொண்டாள். குந்தியும் கர்ணனைக் காண விரும்பினுள்.

வியாசர் அவர்களெல்லோரையும் கங்கா நதிக்கரையில் ஒரு சோலைக்கு அழைத்துப்போய், அங்கே துரியோதனுதியரையும் கர்ணனையும், பீஷ்மர், துரோணர் கடோத்கசன், அபிமன்யு, இளம் பாண்டவர்கள், சகுனி, சிகண்டி யாவரையும் நால்வகைப் படையுடன் வரவழைத்துக் காட்டினுர். எல்லோரும் ஆசைதீரக் கண்டு, பேசி, ஆனந்தங்கொண்டார்கள்.

பாண்டவர்களும் அவர்களைக் கண்டு பரமானந்தமடைந்தார்கள்.

அப்பால் துரியோதனுதியரும் மற்றும் யாவரும், தத்தம் பகுதிக்குச் சென்றனர். வியாசர் ஆக்ஞைப்படி, பாண்டவர் அஸ்திஞபுரம் சென்றனர்.

ஸ்ரீமகாபாரதம்,18-வது சுவர்க்காரோகண பர்வத்தில், தருமர் இந்திரலோகம் காண்பதும், துரியோதனனைக் காண்பதும், கர்ணன் அர்ச்சுனன் முதலியவர்களைக் காண்பதும், வைகுண்ட தரிசனஞ் செய்ததும் கிழ்க்கண்ட விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது:

இந்திரனுடைய பரிவாரங்கள் தருமபுத்திரரை விமானத்தில் அழைத்துக் கொண்டு, இந்திரலோகம் போய், அங்குள்ள அதிசயங்களையும் புண்ய புருஷர்களையும், புண்ய புருஷர்களுடைய சுகாநுபவங்களையும், மாடமாளிகைகளையும், இன்னும் பூலோகத்தில் காணக் கிடைக்காத அதிசயங்களையும், அவருக்குக் காட்டிக்கொண்டே சென்று, அவரை இந்திரனுடைய சபைக்குக் கொண்டு போனுர்கள்.

அங்கே தருமபுத்திரரைக் கண்ட நாரதர், அவருடைய குண விசேஷங்களையும், அந்த குண விசேஷங்களால் அவரடைந்த மேன்மையையும் சிறப்பித்துப் பேசினுர்.

தருமபுத்திரர் "சுவாமி, நான் பெற்ற பேறு கிடைத்தற்கரியதாயினும், என்னுடன் பிறந்தவர்களும் பத்தினியும் வழியிலிருந்து மறைந்து போனுர்களே! அவர்களை நான் இந்த இடத்திலே கண்டால், எனக்குண்டாயிருக்கிற தாபம் நீங்கும். இல்லாமற்போனுல், இத்தனை சம்பிரமங்களைப் பெற்றவனுகேன்" என்ருர்.

அப்பால் இந்திரன், தருமபுத்திரருக்கு அவர் பிரார்த்தனையை நிறைவேற்றக் கருதி, "இதோ உமது தம்பிமார்களை நீர் பார்க்கலாம். கர்ணனையும் பார்க்கலாம். பத்தினியையும் பார்க்கலாம். கவலைப்படவேண்டாம்" என்று நவின்று, அவருக்கு அவர்

களைக் காட்டும்படி தன் தூதர்களுக்குக் கட்டளையிட்டான்.

அவர்கள், தருமராஜனை அழைத்துக்கொண்டு போய், துரியோதனனைக் காட்டினார்கள். துரியோதனன், தன் எதிரில் அரம்பாஸ்திரீகள் பரதநாட்டியமாட, தன் தோளில் பாரிஜாதபுட்பமாலை விளங்க, அநேகமான பணியாளர் அநேக உபசாரங்கள் புரிய, நவரத்தினகசிதமான சிங்காசனத்திலே வெகு சுகமாயிருக்கக் கண்டார்.

''இவனுக்கு இந்தப் பதவி கிடைத்ததெப்படி?'' என வினவுகையில், ''இவன் கணக்கிறந்த பாவங்களைச் செய்தவனானாலும், போர்முகத்தில் உறுதியாய் இருந்து உயிரைத் திரணமாய் மதித்து, எதிரியுடன் சண்டை செய்து இறந்தானாகையினால், இவனுக்கு இப்பதவி கிடைத்தது'' என்று தேவர்கள் கூறக் கேட்டு மகிழ்ந்தார்.

அப்பால் தேவதூதர்கள் தருமபுத்திரரைத் தெய்வலோகத்தில் பல இடங்களுக்கும் அழைத்துப் போய்க் காட்டி, நரக தரிசனத்தையும் செய்வித்தனர்.



காஞ்சி காமகோடி பீடத்துப் புதுப்பெரியவாளுடன்,
மதுரை-ஆதீன அடிகளார்.

அங்கே, தருமபுத்திரர் பாபிகள் படும் பாடுகளைக் கண்டு, அஞ்சி நடுங்கிப் பதைத்துருகி அப்பகலேகினர்.

அங்கே ஒரு பக்கத்தில், தம்முடைய தம்பிமார்கள், கர்ணன், திரௌபதி, திருஷ்டத்துய்மன், உபபாண்டவர், உறவினர் யாவரும் நரகில் கிடந்து வருந்துவதைக் கண்டார்.

கண்டதும் ஆச்சரியப்பட்டு, "இவர்களுக்கேன் இந்தத் துன்பம்?" என, தேவர்கள் "நல்வினை கொஞ்சம் செய்தவர்கள் முன்னே கொஞ்சம் சுவர்க்க போகத்தை அனுபவிப்பர். அப்பால் தீவினைகளுக்குத் தக்கபடி நரகத்துன்பங்களை அனுபவிப்பர். உமது தம்பிமார்களும் உமது உறவினரும், மனைவியும், தீவினை சிறிதும் நல்வினை அதிகமும் செய்தவர்கள். ஆகையினல் முன்னே நரகத்தை அனுபவிக்கிறார்கள்.

"துரியோதனனும் அவன் சகோதரரும், நல்வினை கொஞ்சமும், தீவினை அதிகமும் புரிந்தவர்கள். ஆகையினல் அவன் முன்னே போகத்தை அனுபவிக்கிறான். இனி அவனுக்கும் அவன் சகோதரர்களுக்கும் மீளாத நரக வேதனை உண்டாகும்" என்றனர்.

அப்போது இந்திரன் அங்கு வந்து "உம்மைக் கண்ட அளவில் உமது தம்பிமார் முதலிய யாவரும் [illegible]

உன்னதப் பதவியிலுறுவதற்காக வீரசாந்தி ஸ்நானத்திற்குப் போய், பரிசுத்தமான அமுத போஜனமுண்டு, ஆனந்தத்திலிருக்கிறார்கள். வாரும் அந்தத் தரிசனமும் பாரும்" என்று அழைத்துச் சென்றான்.

இந்திரன் தருமராஜனைப் பல இடங்களுக்கு அழைத்துச்சென்று, அப்பால் பரவாசுதேவன் எழுந்தருளியுள்ள வைகுந்த நகரத்திற்கு அழைத்துப்போய், வைகுந்த நாதருடைய தரிசனம் செய்வித்தான்.

பின், அங்கே ஒரு பக்கம் கிருஷ்ணபகவான் அஷ்டலக்ஷ்மிகளுடன் விளங்குவதையும்காட்டினன்.

அதன் பின் இன்னொரு பக்கத்திற்கு அழைத்துப்போய், அங்கே கர்ணன், பீமசேனன் முதலிய தம்பிமார், திரௌபதி, இளம் பஞ்சபாண்டவர் முதலியவர்களைக் காட்டினன். அவர்களெல்லோரும் இந்தவிதமென்று இயம்புதற்கரிய, அரிய போக பாக்கியங்களுடன் சுகமாயிருப்பதைக் கண்டு, தருமபுத்திரர் சந்தோஷமடைந்தார்.

அப்பால் தருமபுத்திரரை, அச்சுதப் பெயர் அண்ணலாகிய பச்சைமால் (மகாவிஷ்ணு) கிருபாகடாக்ஷம்வைத்துத் தம் அருகில் அமரும்படி அநுக்ரகம் செய்தருளினர்.

அந்தக் காட்சியைக் கண்டு யாவரும் மகிழ்ந்தனர். புண்ணியத்தின் மகிமையையெண்ணிப் பூரித்தனர். இந்திரன் முதலிய அவர்கள் அனைவரும் அவ்விடம் விட்டுத் தத்தம் இடத்திற்கு ஏகினர்.

கம்பராமாயணத்தில், தசரதச் சக்கரவர்த்தி இறந்த 14 ஆண்டுகள் கழித்து, இராமபிரான் சீதாபிராட்டியாரை இலங்கையிலிருந்து மீட்டி வந்தபின், அவள் தீக்குழி பாய்ந்து தனது கற்பு வழுவா ஒழுக்கத்தை உலகத்தாருக்கு மெய்ப்பித்த பின், தசரதமன்னன் வானுலகத்திலிருந்து பூவுலகிற்கு வந்து, இராமபிரானையும், சீதாபிராட்டியாரையும் கண்டு மகிழ்ந்தார் என்றும், அவ்விருவரும் தசரதரைத்தொழுதார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

அந்த செய்யுள் வருமாறு:-

ஆதியான் பணியருள் பெற்ற
அரசருக்கரசன்
காதல்மைந்தனைக் காணியயுவந்த
தோர் கருத்தால்
பூதலத்திடைப்புக்கனன்
புகுதலும் பொருவில்

வேத வேத்தனும் அவன்
மலர்த்தாள் மிசைவீழ்ந்தான்

அதைத் தொடர்ந்து தசரதர், இராமரைப் போற்றிப் பேசியிருப்பதும், சீதையைத் தேற்றிப் பேசியிருப்பதும், இராமரை வரங் கேட்கச் சொல்லி அவர் கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்திருப்பதும், அதன் பின்னர் இராமரை மண்ணுலகத்தில் நிறுத்தி விட்டுத் தான் விண்ணுலகம் ஏகினதும், விரித்துக் கூறப்பெற்றிருக்கிறது.

அதன் இறுதிச் செய்யுள் வருமாறு:-

வரம் இரண்டளித்து
அழகனையிளவலை மலர்மேல்
விரவுபொன்னினை மண்ணிடை
நிறுத்திவிண்ணிடையே
உரவிமானமீது ஏகினன் உம்பர்
தம் உலகும்
பரவு மெய்யினுக்கு உயிரளித்து
உறுபுகழ் படைத்தோன்.

சிலப்பதிகாரத்தில், பத்தொன்பதாவது ஊர்சூழ்வரி அத்தியாயத்தில், கோவலன் வெட்டுண்டு உயிர் இழந்த இடத்தில் கண்ணகி சென்று, கணவனுடைய மார்பைத் தழுவி அழுதபொழுது, கோவலன் எழுந்து நின்று அவளுடைய கண்ணீரைத் துடைத்ததாகவும், அவள் அழுது ஏங்கி நிலத்தில் வீழ்ந்து கோவலனுடைய பாதங்களைப் பற்றியதாகவும், அப்பொழுது, கோவலன் வெட்டுண்ட பழுது ஒன்றுமின்றி எழுந்து, பல அமரர் குழாமாகச் சூழ்ந்திருக்கப் போனான் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

தூல உடல் வெட்டுண்ட போதிலும் ஆவி உடல் வெட்டுப்பட முடியாதாகையால், "பழுது ஒழிந்து எழுந்திருந்தான்" என்று பாடலில் கூறப்பட்டிருப்பது இங்கு குறிப்பாக நோக்கத் தக்கது:-

"என்றிவை சொல்லி அழுவாள்
கணவன் தன்
பொன்றுஞ்சு மார்பம்பொருந்தத்
தழீ இக்கொள்ள
நின்றான் எழுந்து நிறைமதி
வாண்முகம்
கன்றியதென்று அவன் கண்ணீர்
கையால்மாற்ற
அழுதேங்கி நிலத்தின் வீழ்ந்து
ஆயிழையாள் தன் கணவன்
தொழுதகைய திருந்தடியைத்
துணைவனைக் கையாற்பற்றப்
பழுது ஒழிந்து எழுந்திருந்தான்
பல்லமரர் சூழாத்துளான்
எழுதெழின் மலருண்கண்
இருந்தைக்கவெனப் போனான்."
—சிலப்பதிகாரம்.

இருபத்து மூன்றுவது கட்டுரைக் காதையின் இறுதியில், வானுலகம் சென்றிருந்த கோவலன் இவ்வுலகத்திலிருந்து கண்ணகியை அழைத்துச் செல்லுவதற்குப் பதினான்காவது நாள் இங்கு வந்து, இருவரும் வானுலகம் சென்றதாகக் குறிப்பிட்டிருக்கிறது. இறக்கும் தருவாயிலுள்ள

வர்களே, அன்புடைய உற்றுர் உறவினர், ஆவி உலகத்திலிருந்து அழைத்துச் செல்ல வருவார்கள் என்பதை இது உறுதிப்படுத்து கிறது.

இருபத்தொன்பதாவது வாழ்த் துக்காதையில், கண்ணகி ஆகா யத்தில் செங்குட்டுவனுக்குக் காட்சி கொடுத்ததாகக் கூறப்படு கிறது.

''என்னேயிஃதென்னே
யிஃதென்னே யிஃதென்னேகொல்
பொன்னஞ்சிலம்பிற்
புனேமேகலேவளேக்கை
நல்வயிரப் பொற்றேட்டு
நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடி யொன்று
மீவிசும்பிற்றேன்றுமால்''
—சிலப்பதிகாரம்

மின்னுக்கொடி என்பது கண் ணகியைக் குறிப்பதாகும்.

மேலே சொன்ன சான்றுகளில், இராமாயணத்தில் தசரதச் சக் கரவர்த்தி இராமபிரானுக்கும் சீதாபிராட்டியாருக்கும் முன்னே தோன்றிப் பேசியதும், வரங் கொடுத்ததும், திரும்பவும் விண் ணுலகம் சென்றதும், தூல உட லோடு அல்ல; ஆவி உடலோடு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

அதுபோலவே, சிலப்பதிகாரத் தில் கோவலன் கண்ணகிக்கு முன் தோன்றி அவளுடைய கண்ணீ ரைத் துடைத்ததும், பழுது ஒன்றுமில்லாத உடலோடு விண் ணுலகம் சென்றதும், கண்ணகி



மதுரை ஆதீன அடிகளாரின் இறை வழிபாடு

ஆகாயத்தில் செங்குட்டுவனுக்குக் காட்சி கொடுத்ததும், தூல உடலில் அல்ல-ஆவி உடலிலேயே என்பதையும் அறிந்து கொள்ளல் வேண்டும்.

ஸ்ரீமகாபாரதத்தில், மண்ணுலகத்திலிருந்த திருதராஷ்டிரன் இறந்துபோன தன்னுடைய மைந்தரைக் கண்டு ஆனந்தித்ததும், பேசியதும், விண்ணுலகத்திலுள்ளவர்களை வியாசர் வரவழைத்துக் காட்டியதால், அது வியாசருடைய உதவியால் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியாகும்.

திருதராஷ்டிரன் தானே அவ்விதம் செய்து கொள்ள முடியவில்லை என்பது, ஒருமுக்கியமான குறிப்பை நமக்கு அறிவுறுத்துகின்றது. மண்ணுலகத்திலுள்ள எல்லோரும் இறந்தவர்களோடு நேர் தொடர்பு வைத்துக் கொள்ள முடியாது என்பதும், அப்படிப்பட்டவர்கள், இறந்தவர்களோடு தொடர்புகொண்டு வரவழைக்கவும், பிறருக்கு அவர்களைக் காணும்படி காட்டவும் செய்கின்ற தன்மை பெற்ற (Medium) மீடியம் மூலமாகத்தான் அவர்களோடு தொடர்பு கொள்ள முடியுமென்பதும் தெளிவாகும்.

இனி, தருமபுத்திரர் மண்ணுலகத்தைவிட்டு விண்ணுலகம் சேர்ந்து, அங்கு தன்னுடைய சுற்றத்தாரெல்லாம் வெவ்வேறு நிலைகளில் இருந்தவற்றைப் பார்த்துவிட்டு, பின்னர் அவர் வைகுண்டம் சேர்ந்து, அங்கு மகாவிஷ்ணுவின் அருகில் இருக்கும் பெருமையைப் பெற்றார் என்பது, தூல உடலில் அல்ல; ஆவி உடல் கொண்டு நிகழ்த்தியதே என்று அறிந்திருத்தல் வேண்டும்.

பெரிய புராணத்தில், சுந்தரமூர்த்தி நாயனார் தேவலோகத்திலிருந்து வந்த வெள்ளையானையின் மேல் ஏறிக்கொண்டு திருக்கயிலாயம் சென்றதும், அவர் அங்கு போகும்பொழுது பாடிய திருப்பதிகம் பூலோகத்திற்கு வந்து பரவிய முறையும், சேரமான் பெருமாள் நாயனார் குதிரையின் மீதிலேறித் திருக்கயிலாயம் சென்றதும், அங்கு அவர் பாடிய திருவுலா இப்பூவுலகத்திற்கு வந்த முறையும், சேரமான் பெருமாள்நாயனருடன் அவருடைய படைவீரர்கள் தூல உடலைவிட்டு வீரசுவர்க்கம் எய்தியதும், கீழ்வருமாறு குறிப்பிடப் பட்டிருக்கிறது:

ஒருநாள் சேரமான் பெருமாள் நாயனார் ஸ்நானம் பண்ணும் பொழுது, சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக்களத்துக்குப் போய், அங்கு இருக்கின்ற சிவாலயத்தை பிரதக்ஷிணம் செய்து, உள்ளே புகுந்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று, அக்கினியிற்பட்ட மெழுகுபோல் மனம் கசிந்துருக, இரண்டு கண்ணினின்றும் ஆனந்த அருவி சொரிய, சரீரக்

திலே உரோமாஞ்சிதங்கொள்ள, இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக்குவிய, ''அடியேனை இப்பிர பஞ்ச வாழ்க்கையினின்றும் நீக்கி, தேவரீருடைய திருவடியிலே சேர்த் தருளவேண்டுமென்று, தலைக்குத் தலை மாலையணிந்ததென்னே என் னும் திருப்பதிகம் பாடியருளி னார்.

அப்பொழுது கைலாசகிரியிலே சிவபெருமான் தேவர்களை நோக்கி, ''நீங்கள் போய் நம்மு டைய அடியானாகிய சுந்தரனை, வெள்ளையானையின் மேலேற்றிக் கொண்டு வாருங்கள்'' என்று ஆக்ஞாபித்தார்.

அதைக் கேட்ட தேவர்கள், சுவாமியை நமஸ்கரித்து அனுமதி பெற்று, வெள்ளை யானையையுங் கொண்டு திருவஞ்சைக்களத்தை யடைந்து, கோயிலை வலஞ் செய்து திருவாயிலிலே போய், உள்ளேயிருந்து வந்த சுந்தர மூர்த்தி சுவாமியை எதிர் கொண்டு, சுவாமியுடைய ஆக் ஞையைத் தெரிவித்தார்கள்.

அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார், சுவாமியை நினைத்து நமஸ்கரித்து எழுந்து, தேவர் களுக்கு எதிரே போனார்.

தேவர்கள் அவரைப் பிரதட்சி ணம் செய்து வெள்ளை யானையின் மேலேற்ற, அவர் பஞ்சவாத்தி யங்கள் ஆரவாரிக்கவும், தேவர் களெல்லோரும் ஸ்தோத்திரஞ் செய்து புஷ்பமாரி பொழியவும், தம்முடைய தோழராகிய சேர மான் பெருமாள்நாயனாரைத் திருவுளத்திலே நினைத்துக் கொண்டு சென்றார்.

சேரமான் பெருமாள்நாயனார் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய செயலை அறிந்து, அந்த க்ஷணமே அருகில் நின்ற ஓர் குதிரையின் மேலேறிக்கொண்டு, திருவஞ் சைக்களத்துக்குப் போய், வெள்ளை யானையின் மேலேறிக் கொண்டு ஆகாயத்திற் செல்லும் சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் கண்டு, தாம் ஏறிய குதிரையின் செவியிலே ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஓதியருளினார்.

உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து, சுந்தர மூர்த்தி சுவாமிகளுடைய வெள்ளை யானையை அடைந்து அதனை வலம் செய்து, அதற்கு முன்னாகச் சென்றது.

சேரமான் பெருமாள்நாயனா ருடைய படைவீரர்கள், குதிரை யிற் செல்லும் அந்நாயனாரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படும் எல்லைவரைக்கும் ஆகாயத்திலே கண்டு, பின் காணாமையால், மிகுந்த திடபக்தியினாலே உருவிய உடை வாட்களினால் தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து, வீரயாக்கையைப்பெற்றுப்போய், சேரமான் பெருமாள்நாயனாருக்கு முற்பட்டு, அவரை சேவித்துக் கொண்டு சென்றார்கள்.

சேரமான் பெருமாள்நாயனார் முன்செல்ல, பின்சென்ற சுந்தர

மூர்த்தி சுவாமிகள், "தானெனை முன்படைத்தான்" என்னும் திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டு, கைலாச மலையின் தெற்குவாயிலுக்கு முன்போனார்.

போன உடனே, இருவரும் யானையினின்றும் குதிரையி னின்றும் இறங்கி, பலபல வாயில் களையும் கடந்து, திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள்.

அங்கே சேரமான் பெருமாள் நாயனார் தடைப்பட்டு நிற்க, சுந்தரமூர்த்தி சுவாமிகள் உள்ளே போய் சுவாமி சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, ஸ்தோத்திரம் செய்துகொண்டு நின்றார். சுவாமி அவரை நோக்கி, "சுந்தர! வந்தனையோ" என்றார்.

அதைக் கேட்ட சுந்தரமூர்த்தி சுவாமிகள், "சுவாமி! அடியேன் செய்த பிழை பொறுத்து என்னை அடிமையாகக்கொண்டு, பந்தத்தி னின்று நீக்கி, அடியேனுக்குத் திருவடி தந்தருளிய பெருங் கருணையை என்னால் சொல்லும் தரத்ததோ!" என்று சொல்லி, பல முறை நமஸ்காரம் செய்து, சிவானந்த வெள்ளத்தில் அமிழ்ந்து நின்றார்.

பின்பு, "சுவாமி, தேவரீருடைய திருவடிகளைஅடையும்பொருட்டுச் சேரமான் பெருமாள் திரு வணுக்கன் திருவாயிலின் புறத் திலே வந்து நிற்கிறார்" என்று சொல்ல, சுவாமி அவரை உள்ளே அழைப்பித்து, "நீயும் ஆலால சுந்தரனும், நம்முடைய கணங் கள் எல்லாவற்றிற்கும் தலைவரா யிருங்கள்" என்று அருளிச் செய்தார்.

அதைக்கேட்டு சுவாமியை நமஸ்கரித்து எழுந்து, அவருடைய திருவருளைத் தலைமேற்கொண்டு, சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆலால சுந்தரராகி, முன்னே தாம்செய்த திருத்தொண்டைச் செய்பவரும், சேரமான் பெருமாள் நாயனார் கணநாதராகி, அவர் செய்யும் தொழிலைச் செய்பவரும் ஆனார் கள்.

முன்னே பூமியில் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும், முறையே கமலினியாரும் அநிந்திதையாரும் ஆகி, பார்வதி தேவிக்குத் தாங்கள் முன் செய்த திருத்தொண்டைச் செய்து வந் தார்கள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் வழியிலே அருளிச் செய்த திருப் பதிகத்தை, இந்தத் தக்ஷிண பூமி யிலே ஏற்றும் பொருட்டு, சமுத்திர ராஜனாகிய வருண னிடத்திலே கொடுக்க, அவன் அதைத் திருவஞ்சைக்களத்திலே உய்த்துத் தெரிவித்தான்.

சேரமான் பெருமாள் நாயனார் அருளிச் செய்த திருவுலா, திருக் கயிலையிலிருந்த மாசாத்தனாரால் கேட்கப்பட்டு, அவரால் இப் பூலோகத்தில் திருப்பிடவூர்தனில் உள்ள வேதியர் மூலம், வெளிப் படச் சொல்லலாயிற்று.

சுந்தரமூர்த்தி நாயனாரை மண்ணுலகத்திலிருந்து விண்ணுல கத்திற்கு வெள்ளையானையின் மீது ஏற்றி அழைத்து வரும்படி சிவ பெருமான் தேவர்களுக்கு உத்தர விடவே, அவர்கள் திருவஞ்சைக் களத்திற்கு வந்து, கோயிலை வலம் வந்து, சுந்தரமூர்த்தி நாயனாரிடம் சுவாமியுடைய உத்தரவைத் தெரிவித்ததும், அவர் சுவாமியை நினைத்து நமஸ்கரித்து எழுந்து தேவர்களுக்கு எதிரே போனார் என்பதும், இறக்கும் தருவாயில், அவரவர்களுக்கு ஆப்தமான மேலுலக வாசிகள் எதிர்கொண் டழைக்க வருகிறார்கள் என்பதை வலியுறுத்துவதாகும்.

அவ்விதமாக சுந்தரமூர்த்தி நாயனுர் மண்ணுலகை விட்டுச் செல்லும் பொழுது, தனது தோழராகிய சேரமான் பெருமாள் நாயனுரை நினைக்கவே, சேரமான் பெருமாள் நாயனுரும், வெள்ளை யானையில் ஆகாயத்தில் செல்லுகின்ற ஆரூரரைக் கண்டு, தானும் விண்ணுலகம் செல்வதற்காக, தான் ஏறியிருந்த குதிரையின் செவியிலே ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதியருள, அந்தக் குதிரை சேரமான்பெருமாளுடன் ஆகாயத்திலே பாய்ந்து ஆரூரரையும் வெள்ளை யானையையும் வலம் வந்து, அதற்கு முன்னுகச் சென்றது தூல உடலில் அல்ல-ஆவியுடலோடு என்பதை அறிதல் வேண்டும்.

கற்புடைய பெண்கள், கணவன்மார் பிரிவாற்ருமையினுல் உடனடியாக ஆக்கையைவிட்டுக் கணவன்மாரோடு மேலுலகம் செல்லும் தன்மைபோல, சேரமான் பெருமாளும், தோழர் விண்ணுலகம் செல்லுவதைக் கண்டதும், தனது குதிரையினது ஆக்கையை (ஸ்தூல உடம்பை) ஸ்ரீபஞ்சாக்ஷரம் ஓதிப் பிரித்து, அதனுடைய ஆவி உடலின்மேல் தானும் தன் ஆக்கையை விட்டுப் பிரிந்து ஆவி உடலோடு ஆரோகணித்து, ஆகாயத்தில் சென்று, ஆரூரரையும் வெள்ளையானையையும் வலம் செய்து, முன்னுகச் சென்ருர் என்பதை உய்த்துணர்தல் வேண்டும்.

இவர்களெல்லாம் தூல உடலை விட்டுப் பிரிந்து ஆவி உடலோடு தான் சென்ருர்கள் என்பதை, சேரமான் பெருமாள் நாயனுருடைய படை வீரர்கள் தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து, வீரயாக்கையைப் பெற்று, சேரமான் பெருமாளை சேவித்துக் கொண்டு, அவருக்கு முன்னே சென்று சேர்ந்த நிகழ்ச்சி வலியுறுத்துவதாகும். ஆவி உடலையே வீரயாக்கை என்று சொல்லப் பெற்றிருக்கின்றது.

அன்றியும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் விண்ணுலகத்திற்குப் போகும் வழியில் பாடிய ''தானெனை முன் படைத்தான்''



மதுரை ஆதீன அடிகளார், தம் பக்தர் ஒருவருக்குப் பேட்டியளித்தல்

என்னும் திருநொடித்தான் மலைத் திருப்பதிகம், மண்ணுலகத்தி லுள்ள திருவஞ்சைக் களத்தில் வருணனால் தெரிவிக்கப்பெற்றது, மேலுலக நிகழ்ச்சிகளை மேலுல கத்திலுள்ளவர்கள் பூலோகத்தில் அறிவிக்க முடியும் என்பதை வலியுறுத்துவதாகும்.

அது போலவே, சேரமான் பெருமாள் நாயனார் சிவலோ கத்தில் அருளிச் செய்த திரு உலா, அங்கிருந்த மாசாத்த னாரால், பூலோகத்திலுள்ள திருப் பிடவூர்தனில் உள்ள வேதியர் மூலம் இங்கு வெளிப்பட லாயிற்று என்ற வரலாறும், மேலுலகத்தவர் அங்குள்ள நிகழ்ச்சிகளை பூலோகத்தாரில் தகுதியுள்ளவர்கள் மூலம் இங்கு அறிவித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு, போதிய சான்றாக அமைந்திருப்பது சிந்திக்கத் தக்க தாகும்.

(நன்றி: "இறந்தவர்கள் வாழும் நிலையும் பேசும் முறை யும்" என்னும் திருவருள் தவ நெறி மன்ற வெளியீடு.)

# ஹிந்து தேவாலயப் பாதுகாப்பு மாநில மாநாடு

இந்து தேவாலயங்களைப் பாதுகாத்து, அவற்றின் மறுமலர்ச்சிக்கான வழி முறைகளை வகுக்கும் நோக்குடன், "இந்து தேவாலய பாதுகாப்பு மாநில மகாநாடு" என்ற மகாநாடு, மாநில அளவில் 1970 டிசம்பர் 5, 6 தேதிகளில் சேலத்தில் நடைபெறும்.

இதன் அமைப்புக் கமிட்டியார், ஆலயங்களை பாதிக்கும் பல்வேறு தொல்லைகளைக் கண்டறிந்து, அதற்குத் தக்க மாற்றுமுறைகளை விவாதித்து முடிவு செய்து, அவைகளைத் தீர்மான ரூபமாக மாநாட்டின் முன் வைப்பார்கள். இந்த யோசனைகள் அமுல் நடத்த அதிகாரிகளை வற்புறுத்துவதற்காக, ஒரு செயல் கமிட்டி மாநாட்டில் நிறுவப்படும். தமிழகத்திலே அன்றி அனைத்து இந்தியாவிலேயே இத்தகைய மாநாடு கூட்டப்படுவது இதுவே முதல்தடவையாகும்.

தமிழகத்தில் உள்ள எல்லா சமய ஆதினத் தலைவர்களும், இந்து சமய மக்கள், பேரறிஞர் மற்றும் பலர் இந்த மகாநாட்டில் கலந்து கொள்ள அழைக்கப்படுவார்கள். சமீப காலத்தில் தமிழ் நாட்டிலே ஆலயங்களில் குறிப்பிடத் தக்க திருப்பணி வேலை செய்த பெரியோர்கள், பொன்னுடை அணிவித்து கௌரவிக்கப்படுவார்கள். ஆலய கலாச்சார பாதுகாப்பு சிறப்பு மலர் வெளியிடப்படும்.

ரூபாய் 100-ம், அதற்கு மேலும் நன்கொடை அளிக்கும் பெரியோர்கள் வரவேற்புக் கமிட்டியில் அங்கம் வகிப்பார்கள். பிரதிநிதிகள் கட்டணம் ரூபாய் 10. அவர்கள் தங்குவதற்கும் உணவுக்கும் வசதி செய்யப்படும். இந்து தேவாலயங்களின் மறுமலர்ச்சிக்கான இம்முயற்சியை ஊக்குவிக்கும் முறையில், ஆயிரக்கணக்கில் இந்த மகாநாட்டிற்கு விஜயம் செய்து சிறப்பிக்குமாறு, தமிழ்நாட்டில் உள்ள அனைத்து இந்து மக்களையும் மகாநாட்டு அமைப்புக் கமிட்டியார் வேண்டிக்கொள்கிறார்கள். இது சம்பந்தப்பட்ட கடிதப் போக்குவரத்துக்களுக்கு விலாசம்:- "செயலாளர், தமிழ்நாடு இந்து தேவாலயப் பாதுகாப்பு மாநில மாநாடு, 162-பி, முதல் அக்ரஹாரம், சேலம்—1."

# ஓர் வேண்டுகோள்.

இந்து தேவாலயப் பாதுகாப்பு மாநில மகாநாடு, 1970 டிசம்பர் 5, 6 தேதிகளில் சேலத்தில் நடைபெறுகின்றது. இதன் அமைப்புக் கமிட்டியார் இன்று ஆலயங்களைச் சூழ்ந்திருக்கும் இன்னல்களை அறிந்து, மறு மலர்ச்சிக்கான வழிவகைகளை மாநாட்டின் முன்னர் தீர்மானமாக கொண்டுவரவிருக்கின்றனர்.

இது சம்பந்தமாக கீழே கண்ட விவரங்களை இந்துப்பெருமக்கள் எங்களுக்கு அனுப்பிவைத்தால், அவை மிக்க பயனுள்ளதாக இருக்கும்.

1. உங்கள் ஊரில் (1) மராமத்து செய்யப்படாமல் இடிந்து கிடக்கும் கோவில்கள் (2) பூஜை செய்யாமல் மூடப்பட்டுள்ள ஆலயங்கள் (3) வழிபட முடியாமல் வேறுவிதமாகப் பயன்படுத்தப்படும் ஆலயங்கள் (4) இதற்குக் காரணங்கள்.

2. உங்கள் ஊரில் தெய்வச் சிலைகள் களவு போயுள்ளனவா? விவரம் தெரிந்தால், கைதாகி தண்டிக்கப்பட்டவர்களின் பெயர்களுடன்.

3. ஆலயச் சொத்துக்கள், நிதிகள் பராதீனமாகப் போகும் விவரம். அவற்றை தடுத்து நிறுத்த, இழந்தவைகளை மீண்டும் பெற உங்கள் யோசனைகள்.

4. உங்கள் ஊரில் கடவுளைத் தரிசிக்க நுழைவுக் கட்டணம் உண்டா? அதைப் பற்றி உங்கள் கருத்து?

5. உங்கள்ஊரில் தேர்த் திருவிழாக்கள் நின்று போயுள்ளனவா?

6. இன்றைய ஆலய நிர்வாகத்தின் அங்கங்களான பூசாரிகள் அர்ச்சகர்கள் முதலியவர்கள், பக்தர்களின் பெருமதிப்பை அடைய வழிவகைகள் என்ன?

7. சமயத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவர்களை மட்டும் ஆலயங்களுக்கு தர்ம கர்த்தாக்களாக நியமிக்கப்படுவதற்கு, தக்க வழிவகைகள் என்ன?

8. ஆலய நிதிகள் சமயசார்பற்ற வேலைகளுக்குப்பயன்படுத்தப்படும் விவரம்.

9. ''இந்து சமயத் தலைவர்கள், சமய முன்னேடிகள் ஆகியவர்கள் அடங்கிய சுயேச்சையான தனித்தியங்கும் போர்டாரிடம் தான் ஆலய நிர்வாகம் ஒப்படைக்கப்பட வேண்டும்'' என்ற யோசனைப்பற்றி உங்கள் கருத்து என்ன?

10. பொதுவாக இந்து தேவாலயங்களின் தெய்வீகம், அமைதி, புனிதத்தன்மை காப்பாற்றப்படவும், சமயத்தையும் ஆன்மீகத்தையும் பரப்பும் கேந்திரமாக ஆலயம் இயங்கவும், உங்கள் யோசனைகள் என்ன?

11. இன்றைய அறநிலைய இலாகா சட்டமும்,இதர சட்டங்களும் ஆலயங்களின் நலன்களுக்கு பாதகமாயிருந்தால், அவற்றின் விவரமும், தேவையான மாற்றமும்.

மேற்படி விவரங்களை 20-11-1970 தேதிக்குள் எங்களுக்கு அனுப்பித் தருமாறு வேண்டுகிறோம்.

''செயலாளர்,
இந்து தேவாலயப் பாதுகாப்பு
மாநில மாநாடு,
162-பி, முதல் அக்ரஹாரம்,
சேலம்-1.



## புத்தகக் கொலு

நவராத்திரிப் பண்டிகையை யொட்டி, சென்னை லிப்கோ பதிப்பகத்தார் புத்தகக் கொலு ஒன்றை ஏற்பாடு செய்துள்ளனர். பக்தியையும் சமயநெறியையும் சார்ந்த நூற்றுக்கணக்கான புத்தகங்களை ஒருங்கே சேர்த்து வைத்துள்ளனர். ஸ்ரீராமகிருஷ்ணமடம், சைவசித்தாந்தக் கழகம், கலைமகள் ஆனந்தவிகடன் போன்ற பற்பல பதிப்பகங்களின் அரிய வெளியீடுகள் காட்சியில் இடம் பெற்றுள்ளன. சென்னையில் தி. நகர் ரங்கநாதன் தெருவிலும், திருச்சியில் நந்திகோயில் தெருவிலும் உள்ள அவர்கள் அலுவலகங்களில் அக்டோபர் 25-ம் தேதி முடிய காட்சிகள் நடைபெறும். தினசரி காலை 8-30 முதல் இரவு 8-30 வரை பொது மக்கள் விஜயம் செய்யலாம். விற்பனையின்பேரில் விசேஷத் தள்ளுபடியும் அளித்தி

# கற்சிலை எவ்வாறு தெய்வ சக்தியைப் பெறுகிறது?

ஒரு கல்லாலோ, செம்பாலோ ஆக்கப்பெற்ற சிலையானது, ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப் பெற்றுக் கும்பாபிஷேகம் ஆன பின், தெய்விக சக்தி பெற்று விசேஷ வழிபாடுகளுக்கும் வணக்கங்களுக்கும் உரிய தகுதி பெற்றுத் திகழ்வது எங்ஙனம்?

சாதாரணமாக, ஒருவர் ஒரு மடாதிபதியாக விளங்கி ஆட்சி நடத்துகிறார். மடாதிபதியாவதற்கு முன்னிருந்த மனிதர்தானே மடாதிபதியான பின்பும் இருக்கிறார் என்றால், ஆமாம். ஆனால் அதற்கு முன்னிருந்த பெயரும், சக்தியும் வேறு. மடாதிபதியான பின் அவருக்குரிய சிறப்புப் பட்டமும் சிறப்பு அதிகாரமும் வேறு.

அப்படிப்பட்ட சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும் எவ்வாறு பெறுகிறார்? அந்தந்த மடாலயத்தின் சட்ட திட்டங்களின்படி, சில சடங்குகள் நடைபெறுகின்றன. பட்டாபிஷேகம் என்ற குடமுழுக்கு நடைபெறுகின்றது. புதிய சின்னங்கள் வழங்கப் பெறுகின்றன. சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும் வழங்கப் பெறுகின்றன. அந்தப் பட்டமும் அதிகாரமும், மடாலயத்தாராலும், பொது மக்களாலும் அங்கிகரிக்கப்பெற்று, அவற்றிற்குரிய சிறப்பு மரியாதைகளுக்கும், சிறப்பு உபசாரங்களுக்கும் உரியவராகச் செய்கின்றன என்பதை யாவரும் அறிவர்.

ஒரு சாதாரண மனிதன் ஒரு மந்திரிப் பதவியோ அரச பதவியோ பெறும்பொழுது, அரசாங்கத்தின் சட்டப்படி அதற்குரிய சின்னங்கள் கொடுக்கப் பெற்று, அதற்குரிய அதிகாரம் வழங்கப்பெற்று, அரசாங்கத்தாராலும் பொதுமக்களாலும்அவை அங்கிகாரம் செய்யப்பெற்று, சிறப்பு மரியாதைகளுக்கும் உபசாரங்களுக்கும் உரிய தகுதியைப் பெறுகின்றான் என்பதையும் யாவரும் அறிவர்.

மேலே சொன்ன சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும் பெற்றவர்கள் உருவத்தால் முன்னிருந்தது போலவே தோற்றம் அளித்தாலும், அவர்களுடைய சிறப்புப் பட்டமும், அதிகாரமும் ஆதிக்கமும், தகுதியும், முன்னிருந்த நிலைக்கு மேல் அதிகமாக உள்ளன என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர்.

அவ்விதப் பதவியையும், பட்டத்தையும், அதிகாரத்தையும், ஆதிக்கத்தையும் பெற்ற அவரது உடல், அதற்கு முன்னிருந்த உடலாகவும், வேற்றுமை ஒன்றும் இயலாததாகவுமே இருக்கும் என்பதில் யாருக்கும் எவ்வித சந்தேகமும் இருக்க முடியாது.

இந்த உதாரணங்களைக் கொண்டு, ஒரு சாதாரணக் கற்

சிறப்புப் பட்டமும், அதிகாரமும் ஆதிக்கமும், பதவியும் பெறுகின்ற தென்பதை, அறிவுடையோர் உய்த்துணர்ந்து ஏற்றுக் கொள்ள முடியும்.

பூவுலகத்திலுள்ள அரசாங்கம், நாம் இவ்வுலகத்தில் பிறந்தபின் அனுசரிக்க வேண்டிய கட்டுதிட்டங்களை அமைத்து, தன் அதிகாரிகளை நியமித்து, அவர்கள் மூலம் ஆண்டுவருகிறது.

ஆனல் நம்மை இப்பூவுலகத்தில் வெவ்வேறு நிலைகளில் பிறக்கும்படியும், வெவ்வேறு வயது வரை வாழும்படியும், வயது முடிந்தபின் ஸ்தூல சரீரமாகிய கட்டையிலிருந்து ஆவி உடலைப் பிரித்து மேல் உலகங்களுக்குக் கொண்டுபோய் அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தகுந்த சுவர்க்க நரகமென்னும் அருள் பகுதியிலோ இருள்பகுதியிலோ வாழும்படியும், அதற்குரிய கால எல்லையில் அந்த ஆவி உடலை அழித்து மறு பிறவியில் தள்ளவோ அல்லது மேல் நிலைக்கு எடுத்துக் கொள்ளவோ செய்கின்ற அரசாங்கம் ஒன்று விண்ணுலகத்திலிருந்து ஆட்சி புரிவதையும், அந்த ஆட்சியின் வேதாகமச்சட்ட திட்டங்களை நிறைவேற்றுகின்ற பலதரப்பட்ட அதிகாரிகள், பலதரப்பட்ட அதிகாரங்களோடும், பலதரப்பட்ட உருவங்களில் நம்முடைய கண்களுக்கு காணமுடியாத சூக்குமநிலையிலிருந்து அமுல் நடத்தி வருகிறார்கள் என்பதையும், ஞான நாட்டம் உடையவர்களெல்லாம் ஒரளவு அறிவார்கள்.

(நன்றி: ''விக்ரக ஆராதனையின் விளக்கம்'' என்னும் மதுரை ஆதீனகர்த்தரின் ஆராய்ச்சி நூல்)

# திருஞானசம்பந்தப் பெருமானின் அற்புதச் செயல்கள்

1. சீர்காழித் திருத்தலத்தில், தமது மூன்றுவது வயதில், சிவ பெருமான் கட்டளைப்படி உமா தேவியார் தந்த ஞானப் பாலை உண்டு, சிவஞானம் பெற்றுத் திருஞானசம்பந்தராகி, தேவா ரப் பதிகம் பாடியருளினர்.

2. திருக்கோலக்கா என்னுந் திருத்தலத்தில், சிவபெருமான் வழங்கிய திருவைந்தெழுத்துப் பொறிக்கப் பெற்ற தங்கத்தினு லாகிய தாளங்களை, ஓசை உடை யனவாகப் பெற்ருர்.

3. திருநெல்வாயில் அறத் துறை என்னுந் திருத்தலத்தில், சிவபெருமான் இவருக்கு முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் முத்துச் சின்னங்களும் கொடுத் தருளினர்.

4. திருப்பாச்சிலாச்சிரமம் என்னுந் திருத்தலத்தில், வாழ்ந் திருந்த "கொல்லிமழவன்" என்பவனது புதல்வி "முயலகன்" என்னும் தீராத நோயால் துன் புற, இறைவனை நோக்கிப் பதி கம் பாடி அந்நோயை நீக்கியரு ளினர்.

5. திருச்செங்கோடு என்னுந் திருத்தலத்தில், உடன் வந்த சிவ னடியார்களுக்கு உண்டாகிய குளிர் சுரத்தைப் பதிகம்பாடி நீக்கி அருளினர்.

6. திருப்பட்டிச்சுரம் என்னுந் திருத்தலத்தில், வேனிற்காலத்து வெயில் வெப்பத்தைத் தணிப்ப தற்கு இறைவன் வழங்கிய முத் துப் பந்தரைப் பெற்ருர்.

திருத்தலத்தில், தந்தையராகிய சிவபாதவிருதயர் விருப்பப்படி, அவர் செய்ய எண்ணிய வேள்விக்காகப் பதிகம்பாடி, சிவபெருமானிடமிருந்து ஆயிரம் பசும் பொற் காசுகள் அடங்கிய பொன் முடிப்பைப்பெற்று வழங்கியருளினர்.

8. திருமருகல் என்னுந் திருத் தலத்தில், பாம்பு தீண்டி இறந்த வணிகன் ஒருவனைப் பதிகம்பாடி உயிர்பெற்றெழச் செய்தருளினர்.

9. திருவீழிமிழலை என்னுந் திருத்தலத்தில், சிவனடியார்களுக்குத் திருஅமுது ஊட்டுவதற்காகச் சிவபெருமானது திருவருளால் நாள்தோறும் கிடைத்த படிக்காசுகளைக் கொண்டு, பஞ்சம் தீரும்வரை பலரது பசியை நீக்கியருளினர்.

10. திருமறைக்காடு என்னும் வேதாரணியத் திருக்கோயிலின் நேர்முகக்கதவு வேதங்களால் பூட்டப் பெற்று நெடுங்காலமாகத் திறக்கப்படாமல் இருந்ததை திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம்பாடித் திறப்பிக்க, இவர் பதிகம்பாடி மீண்டும் பூட்டவும் திறக்கவும் அருளினர்.

11. மதுரைத் திருப்பதியில், அடியார்களோடு தங்கியிருந்த திருமடத்தில் சமணர்கள் வைத்த தீ பற்றுதிருக்கவும், அத்தீயின் வெப்பம் பாண்டிய மன்னனைச் சாரவும், பதிகம்பாடி அருளினர்.

12. பாண்டிய மன்னனது வெப்புநோய் சமணர்களால் தீர்க்க முடியாமலிருக்க, அது அவனைவிட்டு நீங்கும்படி, பதிகம் பாடி, திருநீறு பூசி அருளினர்.

13. சமணர்களோடு புரிந்த வாதத்தில், அவர்களது மந்திரம் எழுதப்பெற்று நெருப்பிலிடப் பட்ட அவர்களது ஏடு எரிந்து சாம்பலாகவும், தேவாரப்பதிகம் எழுதிய தமது ஏடு நெருப்பில் வேகாமல் பச்சையாக விளங்கவும் அருளினர்.

14. வைகையாற்று வெள்ளத்தில் இட்ட சமணர்களின் மந்திரம் பொறித்த ஏடு ஆற்று வெள்ளத்தில் அடிபட்டுச் செல்லவும், தேவாரப்பதிகம் பொறித்ததமது ஏடு அதில் எதிரேறிச் செல்லவும் அருளினர்.

15. திருக் கொள்ளம்பூதூர் என்னுந் திருத்தலத்தில், முள்ளி நதி வெள்ளத்தில் திருப்பதிகம் பாடி, அதன் வல்லமையினலேயே வேறு கோலொன்றுமின்றி ஓடத்தை மறுகரை சேரும்படி அருளினர்.

16. போதிமங்கையிலிருந்த 'புத்தநந்தி' என்பவனது துடுக்கை அடக்குவதற்காக, அவனது தலையில் இடி விழும்படி தமது அடியவர் ஒருவர் மூலம் செய்தருளினர்.

17. திருவோத்தூர் என்னுந் திருத்தலத்தில், ஆண் பனைகள்

பலவற்றைப் பதிகம்பாடிப் பெண் பனைகளாக்கினர்.

18. திருமயிலாப்பூர் என்னுந் திருத்தலத்தில், சிவநேசர் என்பவரது மகளாகிய பூம்பாவை என்னும் பெண்மணி, மலர் கொய்யும்போது பாம்பு தீண்டி இறக்க, அவளது பூத உடம்பைச் சுட்டு எலும்பையும், சாம்பலையும் ஒரு குடத்திற் சேமித்து வைத்திருந்தார்கள். அக்குடத்தை கபாலீச்சரத்திற்குக் கொண்டுவரச் செய்து, பதிகம்பாடி, பல ஆண்டுகளுக்கு முன் இறந்துபோன பூம்பாவையை, அதுவரையுள்ள ஆண்டு வளர்ச்சியுடன் குடத்திலிருந்து வெளிவரும்படி பதிகம் பாடிச் செய்தருளினர்.

19. திருநல்லூர்ப் பெருமணம் என்னும் திருத்தலத்தில், இவ்வுலக வாழ்க்கையிலிருந்து தன்னை அழைத்துக்கொள்ள வேண்டுமென்று சிவபெருமானிடம் வேண்டி, உடலிருந்த அனைவரையும் கூட்டிக்கொண்டு, அங்கு தோன்றிய ஜோதியில் கலந்து பேரின்பப் பேறு பெற்ருர்.






## தலையெழுத்தை நிரூபிக்கும் இரேகை சாஸ்திரம்

இந்தியாவில் சில பகுதிகளிலும், முக்கியமாகத் தமிழ்நாட்டிலும், இரேகை சாஸ்திரம் அல்லது நாடி சாஸ்திரம் என்ற ஒன்று இருக்கிறது. அது ஒவ்வொருவருடைய தலையெழுத்தையும் நிரூபிக்கின்றது. அதில் ஒருவருடைய கை இரேகைகளைப் பார்த்து, அதிலுள்ள கோடுகளையும், புள்ளிகளையும் கொண்டு, அவர் பிறக்கும்பொழுது எந்தெந்த கிரகங்கள் எந்தெந்த இடங்களில் இருந்தனவென்றும், அதனல் அவருடைய பெயரும், ஊரும் மற்றும் இப்பூவுலக வாழ்வும் இன்னவிதமாக இருக்குமென்றும் கூறப்பெறுகின்றது.

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T. ராமநாதன் 4, தணிகாசலம் செட்டிரோடு, சென்னை-17. அச்சிடுபவர்: சௌண்டா. காசி சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர் சென்னை-17.

Registered No. M 8206



Wrapper Printed at Sremati Printers, Madras–2.